# பொருளடக்கம்

**கல்கி**

**விரோதிகிருது, சித்திரை 19 - மே 2, 1971**







தொழிலதிபர் திரு பெ. மருதைப்பிள்ளையவர்கள் புதல்வர் திருநிறைச் செல்வன் சிவராம கிருஷ்ணனுக்கும், கொழும்பு பெருவணிகர் திரு கு. பெ. காளியப்ப பிள்ளையவர்களின் குமாரத்தி திருநிறைச் செல்வி ருக்மணி தேவிக்கும் சமீபத்தில் கொழும்பில் திருமணம் விமரிசையாக நடைபெற்றது.

வாழ்க புதுமணத் தம்பதிகள்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 30



இதழ் 40

# அறைகூவல்

**சா**துரியசாலியான பிரதமருக்கும் அவரது கட்சிக்கும் எதிராக அமர்ந்துள்ள ஸ்தாபன காங்கிரஸ் கட்சி தன்னுடைய பணி என்னவென்பதை நன்கு உணர வேண்டும். அரசியல் சாஸனத்தைக் கொண்டு மக்கள் தமது சுதந்திரத்துக்குக் காப்புப் பெறாதவாறு, அச்சாஸனத்தை மாற்றிவிட வேண்டும் என்பதற்கே பிரதமரின் கட்சி திட்டமிட்டிருக்கிறது. இதனை எதிர்த்து, அரசியல் சாஸனத்தின் ஜீவாதாரமான அம்சங்களைக் காப்பதே ஸ்தாபன காங்கிரஸின் பணி. சர்க்காரின் தலையீடு இல்லாமல் மக்கள் பல சுதந்திரங்களை அநுபவிக்க சாஸனம் அளித்துள்ள உரிமைகள்தாம் அதன் ஜீவாதாரமான பகுதி. இந்த உரிமைகளைப் பறிப்பதற்காக சோஷலிஸம் என்ற மாரீச மானை ஆளும் கட்சியினர் மக்கள் முன் ஆட விட்டிருக்கின்றனர். பொன்னும் மணியும் இழைத்த பொய் மான் சீதாதேவியை மயக்கியது போல் மக்களை மயக்குகிறது மோசடி சோஷலிஸம்.

சோஷலிஸம் என்கிற பெயரின் கீழ் பாங்குகள் சர்க்கார் உடைமையாக்கப்படுகின்றன; சொத்துக்கள் பறிமுதல் செய்யப்படுகின்றன; தொழிலபிவிருத்திக்குத் தடையாகும்படியான பல திட்டங்கள் போடப்பட்டு வருகின்றன; இன்னும் இதுபோல் பல தற்கொலைத் திட்டங்கள் அமுல் செய்யப்படுகின்றன. ஆனால் தேசத்தின் தேவை இந்தத் திட்டங்கள் அல்ல. சமூகத்தில் அனைவரும் சம நீதி பெற வேண்டும் என்பதே தேசத்தின் தேவை. அரசியல் சாஸனத்தில் இது மிகத் தெளிவாக வரையப்பட்டிருக்கிறது. இதனையே இன்று அமுலுக்குக் கொண்டு வர வேண்டும். இதை விட்டு, ஸ்ரீமதி இந்திராவுக்கு மெஜாரிட்டி தந்த அதே பொய் மானை ஸ்தாபன காங்கிரஸும் பின்பற்றினால், அது ஸ்ரீமதி இந்திராவுக்கு மேலும் பலம் தந்ததாகவே ஆகும். சமூக சம நீதி நிலைபெறுவதற்கு எவ்விதத்திலும் உதவியதாகாது.

சுதந்திரக் கட்சி கூறும் கொள்கைகளும் திட்டங்களும் மட்டுமே மக்களுக்கு உண்மையில் நன்மை பயக்கும். பல்லாண்டுகளாகச் சுதந்திரக் கட்சி கூறி வரும் இக்கொள்கைகளையும் திட்டங்களையும் அது சமீபத்தில் பம்பாய் கூட்டத்தில் வலியுறுத்தியுள்ளது. இன்றோ, சில ஆண்டுகளுக்குப் பின்போ இவையே சர்க்காரின் கொள்கையாகவும் திட்டங்களாகவும் ஆகத்தான் வேண்டும். இதைத் தவிர்க்க முடியாது. சத்தியத்திலிருந்து தப்பி ஓட முடியாது. மாரீசப் பிரசார மந்திரங்களாலும், தேர்தல் காலத்தில் பிச்சை போடுவதாலும், லஞ்சம் தருவதாலும் ஏழை மக்களின் வாழ் நிலையை உயர்த்த முடியாது. மிகவும் விரிவான அடிப்படையில் வேலை வாய்ப்புக்களைப் பெருக்கி, நியாயமான ஊதியம் அளிக்கும் நிலையை ஏற்படுத்தினாலன்றி ஏழை மக்களை மேம்படுத்தவே முடியாது.

சாலைகள் போடுவது, கழிகால் அமைப்பது, சுத்தமான குடி தண்ணீர் வழங்குவது, வீடுகள் கட்டிக் கொடுப்பது, சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் அமைப்பது — ஆகிய திட்டங்கள்தாம் மக்களுக்கு உடனடியாக நன்மை தருபவை. இந்தத் திட்டங்களுக்கே ஏராளமான மக்களின் உழைப்புத் தேவைப்படுகிறது. ஆலைகளில் இயந்திரங்களை முக்கியமாகக் கொண்டு செய்யும் வேலைக்கு மாறாக, மேற்படி திட்டங்களை, ''திறந்த வெளி வேலை''கள் எனலாம். சுதந்திரக் கட்சி எடுத்துக் கூறும் இவ்விதத் 'திறந்தவெளி வேலை'களை அமுல் செய்தால்தான் நம்முடைய மக்களில் ஏராளமானவருக்கு வேலை கிடைக்க இடமுண்டு. பணக்காரர்களுக்கு மட்டுமே பயனுகிற சிறிய, பெரிய கார்களைத் தயாரிப்பது போன்ற திட்டங்களில் வரிப் பணத்தை முதலீடு செய்வதால் ஏழை மக்களுக்கு எந்த லாபமும் வேலை வாய்ப்பும் இல்லை. பெரிய அளவில் 'திறந்த வெளித் திட்டங்கள்' இல்லாததே நம் தேசத்தின் தாரித்திர

நிலைக்குக்காரணம். வரிகள் அதிகமாகப் போடுவது ஏழைகளுக்கு ஒருவிதத்திலும் நன்மை தராது. விலைவாசிகள் மேலும் அதிகரிக்கும். கடும் வரிகள் போடுவதால், சேமிப்பதற்குப் பதிலாக வீணான அம்சங்களில் செலவழிப்பதற்கு ஊக்கம் தரப்படுகிறது.

நான் இங்கு சொல்லியிருக்கும் திட்டம் நியாயமானது எனில், விவேகிகள் அனைவரையும் — இளைஞர்கள் வயதானவர்கள் அனைவரையும் — சுதந்திரக் கட்சியில் சேர்ந்து அதைப் பலப்படுத்துமாறு கேட்டுக் கொள்ள எனக்கு உரிமை உண்டு. ஸ்தாபன காங்கிரஸானது இந்திராவின் மாய சோஷலிஸத்துடன் வீணாகப் போட்டி போடுவதை விட்டு, என் நல்லுரையை ஏற்குமாயின் அந்தக் கட்சியிலும் மக்கள் சேரலாம். மாரீச மானை வேட்டையாடத் தொடர்ந்து போனால், அது உயிராபத்தான மாயம் என்று தெரியும். இந்த மாய மான் வேட்டையால் மக்களின் சுதந்திரம் பறி போகும்; அரசியல் சாஸனம் மக்களுக்கு அளித்த சுதந்திரங்களைத் தகர்ப்பதில் சர்க்காருக்குப் பலம் அதிகமாகும். தமிழ் நாட்டையும், ஆந்திரத்தையும், மைசூரையும், ஒரிஸ்ஸாவையும் சேர்ந்த இளைஞர்களும், பெண்மணிகளும் சுதந்திரக் கட்சியில் கூட்டம் கூட்டமாகச் சேர்வார்களேயானால், இந்த ராஜ்யங்கள் சுபிட்சம் பெற நிச்சயமாக வாய்ப்பு உண்டு.

நான் இளைஞனாக இருந்திருந்தால் நமது அன்புக்குகந்த இந்த மகத்தான தேசத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் சென்று சுதந்திரக் கட்சிக் கொள்கைகளைப் பிரசாரம் செய்வேன். கிராமப்புறங்களில் இன்று காணும் அசுத்தத்தையும், பிணிகளையும், தரித்திரத்தையும் விரட்டும் சக்தி வாய்ந்த சத்தியத் திட்டம் சுதந்திரக் கட்சி கூறுவதொன்றே என்று ஊர் ஊராகச் சென்று விளக்குவேன். ஆண் பெண் அடங்கலும் இக்கட்சியில் சேர்ந்து எண்ணத்தின் உறுதியாலும், எண்ணிக்கையின் பலத்தாலும், அர்ப்பண மனப்பான்மையுடன் பணி புரிவதாலும் தேசத்தைக் காப்பாற்ற வேண்டும் என வேண்டிக் கொள்வேன். நாட்டு நிர்வாகம் நல்ல முறையில் நடக்கவில்லை. ஏகாதிபத்தியம் ஏற்பட்டுவிடக் கூடிய அபாயத்துக்க நிலையில் இருக்கிறோம். இதைத் தடுப்பதற்காக மக்களைச் சுதந்திரக் கட்சியில் சேர்ந்து பணி புரிய வேண்டுவேன்.

சோஷலிஸம் என்பது நல்ல நிலையை அடைவதற்காகச் சொல்லப்படும் மார்க்கம். அதுவே சுபிக்ஷம் அல்ல. அது தவறான மார்க்கம். சோஷலிஸமே சமூக சமநீதி என்று எண்ணலாகாது. சோஷலிஸ மார்க்கத்தைப் பின்பற்றினால் அரசாங்கத்தின் ஆதிக்கமே ஓங்கும். மக்களின் சுதந்திரம் குறைந்து இறுதியில் அவர்கள் ஓர் ஏகாதிபத்தியத்தின் கீழ் அடிமைகளாவர். இந்த உண்மையைப் பாட்டாளி வர்க்கத்தினர் குறிப்பாக உணர வேண்டும். சோஷலிஸத்தினால் பறிக்கப்படவிருக்கும் சுதந்திர சாஸன உரிமைகளின் மதிப்பைப் பாட்டாளி மக்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)

# என்ன சேதி?

## கண்ணே போன்றவர்

அன்பும், பண்பும் ஒருங்கே அமையப் பெற்ற பாலூர் கண்ணப்ப முதலியார் பள்ளியிலும் கல்லூரியிலும் பாடம் நடத்துவதில் சிறந்து விளங்கியதால், "கன்னித் தமிழ் கேட்க வேண்டுமெனில் கண்ணப்பரிடம் கேட்க வேண்டும்" என்று சொல்வார்கள்.

மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றிய 'சேக்கிழார் பிள்ளைத் தமிழ்' நூலுக்கு விரிவான பேருரை எழுதிச் சிறப்பித்த பாலூராருக்குச் சைவ உலகம் என்றென்றும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறது. "பிள்ளைத் தமிழுக்குப் பாலூரார் உரையின்றிப் பிறிதும் சுடுண்டோ?" என்று பாராட்டும் அளவுக்கு அவ்வுரை பொன்னுரையாக விளங்கி வருகிறது.



பாலூர்
கண்ணப்ப முதலியார்

தள்ளாத வயதிலும் அவர் தமிழுக்காகப் பணி புரிந்தார். கொஞ்சம்கூடச் சோம்பல் இல்லாமல் அதிகாலையில் எழுவார். தம் அருமை மகள் எழுத, பேராசிரியர் அரிய அரிய செய்திகளைச் சொல்வார். அறுபத்துமூன்று வயதில், அறுபத்தைந்து நூல்கள் எழுதிக் குவித்தார் பேராசிரியர்!

தமிழ்ச் சிறப்போடு ஆங்கிலத் திறனும் நிரம்பப் பெற்ற பேராசிரியர், கிரேக்க நாகரிகம் பற்றிய நூலையும், ஜான்சன் வாழ்க்கை வரலாற்றையும், 'கிட்நாப்ட்' நாவலைத் தழுவி 'அமலநாதன்' என்னும் நாவலும் எழுதினார். இவர் ஆராய்ச்சித் திறனுக்குப் 'பொய்யடிமை இல்லாத புலவர் யார்?' என்னும் நூலே போதிய சான்றாகும்.

சென்னையில் உள்ள பல உயர் நிலைப் பள்ளிகளிலும், புதுக் கல்லூரியிலும் பணி புரிந்தவர் கண்ணப்பர். இவரது மறைவால் வருந்தும் குடும்பத்தினருக்கும் மாணவர்களுக்கும் நம் ஆழ்ந்த அனுதாபங்கள்.

# ஓட்டப் பந்தயம்







## சென்றார்கள், வென்றார்கள் !

மேற்கிந்தியத் தீவுகளில் நம் இந்திய இளம் கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் வெற்றி வாகை சூடி 'ரப்ப'ருடன் தாயகம் திரும்புகிறார்கள். இதுவரை மேற்கிந்தியத் தீவு கிரிக்கெட் மாமன்னர்களை வென்றதாக இந்திய கிரிக்கெட் டெஸ்ட் சரித்திரத்திலேயே கிடையாது. ஆனால் இன்று இரண்டாம் டெஸ்ட் வெற்றியும், கடைசி டெஸ்ட் 'டிரா'வும் இந்தியாவின் புகழை வானளாவ அல்ல, அதற்கும் மேலேயே உயர்த்தி விட்டன. வாடேகர் குழுவினருக்கு வாழ்த்துக்கள் தெரிவிக்காத உள்ளம் பாரதத்தில் இல்லை. முதல் டெஸ்ட் பிரவேசத்திலேயே மகத்தான உலகப் புகழைத் தம் சதங்களால் தட்டிக் கொண்டு விட்டார் 'பேபி' காவஸ்கர். கடைசி டெஸ்ட் முதல் இன்னிங்ஸில் அவர் செஞ்சுரி தாண்டி 124ம் இரண்டாம் இன்னிங்ஸில் இரட்டை சதத்துக்கு மேல் இருபது ரன்களும் எடுத்ததானது உலக கிரிக்கெட் மன்னர்களோடு அவரை ஒப்பிட்டுப் பார்க்க வைக்கின்றன. இந்தியாவின் மகத்தான வெற்றிக்குக் காவஸ்கரின் செஞ்சுரிகள் அஸ்திவாரமாக அமைந்தன. பம்பாய் ஆட்டக்காரர்கள் காவஸ்கரும் சர்தேசாயும் தலைசிறந்த பாட்ஸ்மன்கள் என்ற புகழோடு திரும்புகிறார்கள். அரிய பௌலிங் சாதனைகளால் வேங்கட ராகவனும், அபீத் அலியும், பேடியும், பிரஸன்னாவும் புகழ் பெற்றுத் திரும்புகிறார்கள். காப்டன் சோபர்ஸே, 'மேற்கிந்தியத் தீவு பிட்ச் இத்தனை பிரமாதமாக இந்திய ஸ்பின்னர்களுக்கு உதவும் என்று நாம் எதிர் பார்க்கவில்லை' என்று வியந்து போற்றுகிறார். 'சரித்திரம் கண்டிராத அரிய சாதனை' என்று பாராட்டுகிறார், விஜய் மர்ச்சென்ட். 'இந்தியாவின் கௌரவம் உயர்ந்து விட்டது!' என்று கிரிக்கெட் பொருளாளர் திரு சிதம்பரம் நவில்கிறார்.



காவஸ்கர்

இந்திய கிரிக்கெட் கோஷ்டியில் பெரும்பாலும் இளம் வயதினர்களே இடம் பெற்றிருக்கிறார்கள். இந்த மகத்தான வெற்றி இங்கிலாந்து விஜயத்துக்கு முன் அவர்களுக்கு உற்சாகமூட்டும் ஒரு 'டானிக்'காக இருக்கும் என்று நம்புகிறோம். வெற்றி வீரர்களை, 'வருக! வருக!' என்று வாழ்த்துக் கூறி வரவேற்கிறோம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

நீதிமன்றங்கள் நிர்வாகத்தினரின் கொள்கைக்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டும் என்று தமது கட்சிச் சகாக்கள் பொறுப்பின்றிப் பேசுவதைக் குறித்து மத்திய சட்ட மந்திரி ஸ்ரீ ஹெச். ஆர். கோகலே வருத்தம் தெரிவித்திருக்கிறார். இது ஒரு நல்ல விஷயம்.

'இந்திய நீதி மன்றத்தினரின் கௌரவஸ்தானமும் நேர்மையும் மிக உயர்வானவை; இவை உலகனைத்திலும் பெயர் பெற்றுள்ளன; இந்தப் புகழைக் குறைக்கக் கூடிய எவ்விதப் பேச்சையும் செயலையும் மத்திய மந்திரி சபையில் எவருமே ஆதரிக்க மாட்டார்கள்' என்று ஸ்ரீ கோகலே கூறியிருக்கிறார்.



பெங்களூர் செய்தி (ஏப்ரில் 22) ஒன்றின்படி ஸ்ரீ நிஜலிங்கப்பா அரசியல் கட்சி மாறிகளைக் கடுமையாகக் கண்டித்திருக்கிறார். தங்களது சுய நோக்கங்களுக்காக மட்டுமே திடீர் திடீரெனக் கட்சி மாறுவதை ஒரு வியாபாரமாக்கிக் கொண்டுவிட்ட அரசியல்வாதிகளை அவர் சாடினார். இவ்விதக் கட்சிமாறிகளால் அரசியல் அதருமத்தின் அடிமட்டத்துக்கே நாம் போய்க் கொண்டிருக்கிறோம் என்றார்.



நமது நீதிமன்றத்தினரின் சுதந்திரமும், அவர்கள் சட்டத்தைக் கண்டிப்பான நேர்மையுடன் காத்து வரும் பாங்கும் புகழில் ஓங்கி வருகின்றன; இதே சமயத்தில் நமது அரசியல்வாதிகளின் தார்மீக உணர்வும் கண்ணியமும் வருந்தத்தக்க அளவில் சரிந்து வருகின்றன. சர்க்கார் காரியாலயங்களில் ஊழியர் பட்டாளம் அதிகமாக ஆக உபயோகம் அற்ற வேலையும் அதிகமாகும் என்பதற்குக் கணித ரீதியில் சூத்திரம் கண்டுபிடித்தார் டாக்டர் நார்த்கோட் பார்கின்ஸன். நீதிமன்றத்தின் நேர்மை உயர்வுக்கும் அரசியல்வாதிகளின் நேர்மைக் குறைவுக்கும் உள்ள தொடர்பு பற்றியும் அவர் சூத்திரம் கண்டுபிடித்து, இப்புதிரை விடுவிப்பாரா?



மாஸ்கோவிலிருந்து ஏப்ரில் 22ந் தேதியிட்டு வெளியாகியுள்ள ஒரு சுவாரஸ்யமான செய்தி பின்வருமாறு கூறுகிறது: அதாவது, பீகிங்கைப் பின்பற்றும் கோஷ்டியைப் பயன்படுத்திக் கொண்டு இந்தியாவையே சுற்றி வளைக்கச் சீனம் யத்தனம் செய்வதாகச் சீனத்தின் மீது ருஷியா குற்றம் சாட்டியுள்ளது.



ஏப்ரில் 22ந் தேதி நிகழ்ந்த கம்யூனிஸ்ட் கட்சியின் இரண்டாவது ஆண்டு விழாவின் போது நக்ஸலைட்டுகளின் செயல்கள் திடுமென மிகத் தீவிரமானதாகக் கல்கத்தா செய்தி ஒன்று தெரிவிக்கிறது. அன்று அவர்கள் குண்டுகளைப் பெருமளவில் வீசினர். ரயில் நிலையங்களிலும் கல்வி நிலையங்களிலும் தங்களது சிவப்புக் கொடியை ஏற்றினர். ஜாதவ்பூர் போலீஸ் நிலையத்தில் மிகச் சக்தி வாய்ந்த ஏராளமான குண்டுகளை நக்ஸலைட்டுகள் வீசித் தங்களது இரண்டாவது பிறந்த தினத்தைக் கொண்டாடினர். அங்கு ரயில்வே ஸ்டேஷன்மாஸ்டரின் அறையில் தாக்குதல் நடத்தி, டெலிபோன் தந்திகளையும், மற்றப் பொருள்களையும் நாசம் செய்து, ரயில் நிலையத்தில் சிவப்புக் கொடி ஏற்றியதாகப் போலீசார் கூறுகின்றனர். இந்தச் சூறையாடலுக்கு ஒரு பெண் பாடசாலை உட்படக் கல்வி நிலையங்களும் ஆளாயின.

---

## டாக்டர் ராகவன் சுற்றுப்பயணம்



தேசப் புகழ் கொண்ட சம்ஸ்கிருத நிலையமான சென்னை குப்புசாமி சாஸ்திரி ஆராய்ச்சிக் கழகத்தின் வெள்ளி விழா சமீபத்தில் நடந்தது. அகில இந்திய ஆராய்ச்சி மகாநாடு, பண்டித பரிஷத், வேத சதஸ், சம்ஸ்கிருத இசைக் கச்சேரி, சம்ஸ்கிருத நாடகம் முதலியவை விழாவில் இடம் பெற்றன. விழாவைத் தொடங்கி வைத்த டாக்டர் சுநீதி குமார் சட்டர்ஜி கழகத்தின் செயலாளராகத் தொடக்கத்திலிருந்து நற்பணி புரிந்து வரும் பேராசிரியர் வே. ராகவனின் உருவப்படத்தைக் கழகக் கட்டடத்தில் திறந்து வைத்தார். டாக்டர் ராகவன் கிழக்கு—மேற்கு கேந்திரம், (ஈஸ்ட்—வெஸ்ட் ஸெண்டர்) ஹவாயில் நடத்தும் கருத்தரங்கில் பங்கு கொள்ளச் சென்றிருக்கிறார். அமெரிக்கா, கானடா, ருஷ்யா, பல்கேரியா முதலிய தேசங்களுக்கும் கலாசார யாத்திரை செய்து ஜூன் மாதம் திரும்பி வருவார். அவரது சுற்றுப் பயணம் வெற்றிகரமாக நிறைவேற வாழ்த்துகிறோம்.

# மகுடபதி

அமரர் கல்கி

## நான்காம் அத்தியாயம்

## கத்திக் குத்து

மச்சுப் படிகளில் ஏறி மேல் மாடித் தளத்தை அடைந்ததும், மகுடபதி சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு பெரிய ஹாலும், அதன் ஒரு புறத்துச் சுவரில் இரண்டு வாசற்படிகளும் காணப்பட்டன. திறந்திருந்த வாசற்படி வழியாகப் பார்த்தால், இருளடைந்த அறை ஒன்று தோன்றிற்று. ஹாலின் மத்தியில் ஒரு மேஜையும், அதைச் சுற்றி நாலு நாற்காலிகளும் இருந்தன. ஒரு பக்கத்தில் சுவர் ஓரமாக ஒரு பழைய சோபா கிடந்தது. தரையும் மேஜை நாற்காலிகளும் சோபாவும் புழுதியடைந்து கிடந்தன. சில இடங்களில் மட்டும் புழுதி கலைந்திருந்தது. இதனாலெல்லாம், அது வெகு நாட்களாகக் குடித்தனம் இல்லாத வீடு என்று ஊகிப்பது சாத்தியமாயிருந்தது. மேலேயிருந்து அழுக்கடைந்த மின்சார விளக்குகள் தொங்கின. அவற்றை ஏற்றி வெகு நாளாகியிருக்க வேண்டும். ஒருவேளை 'கரண்ட்'டே வருவதில்லை போலிருக்கிறது. இல்லாவிட்டால், அரிக்கன் லாந்தர் எதற்கு? இந்த ஹாலுக்கும் வெளிச்சம் அளித்தது ஓர் அரிக்கன் லாந்தர்தான். சோபாவின் மேல் ஹோட்டலிலிருந்து வாங்கி வந்த பட்சணப் பொட்டணங்கள் கிடந்தன. கீழே ஒரு டிரங்குப் பெட்டியும், கூஜாவும் காணப்பட்டன. சற்றுத் தூரத்தில், தரையில் படுப்பதற்கான சமுக்காளமும் விரித்துக் கிடந்தது.

இவ்வளவையும் மகுடபதி ஒரே நிமிஷத்தில் பார்த்துக் கொண்டான். ஓடைக் கரையில் தான் பார்த்த பெண்ணாயிருந்தால், என்னத்திற்காக இந்தக் குடியில்லாத வீட்டில் வந்து தனியாக இருக்கிறாள் என்று நினைத்த வண்ணம், ஜன்னல் பக்கம் நோக்கினான். அது வரையில் அவளைப் பார்த்துக்கொண்டிருந்த செந்திரு சட்டென்று கிழவன் பக்கம் திரும்பி, ''பாட்டா! சீக்கிரம் வந்தால் அல்லவா தேவலை? அவர்கள் மறுபடியும் திரும்பிப் போகிறார்கள்'' என்றாள். பெரியண்ணன் ஜன்னலண்டை போய், செந்திரு

''பாட்டா! எனக்குப் பசி பிராணன் போகிறது. வா, சாப்பிடலாம்'' என்று சொல்லிக் கொண்டே சோபாவின் மேல் வைத்திருந்த பொட்டணங்களை எடுத்து வைத்துக் கொண்டு பிரிக்கத் தொடங் கினள். பிரசித்திபெற்ற கோயமுத்தூர் ஜிலேபிகளையும், ரவைத் தோசைகளை யும் பார்த்ததும் மகுடபதியின் நாக்கில் ஜலம் ஊறிற்று. பாவம்! அவன் காலை யில் சாப்பிட்டதுதான். நிஜமாகவே அவனுக்குப் பசியினால் பிராணன் போய்க் கொண்டிருந்தது.

கிழவன், கூஜாவைக் கொண்டு போய்ப் பக்கத்தில் வைத்துவிட்டு, மகுடபதியை நோக்கினன். செந் திரு கடைக் கண்ணால் மகுடபதி யைப் பார்த்துக் கொண்டே, ''பாட்டா! உன் சிநேகிதருக்குப் பயம் மட்டுந்தான் இல்லையா, பசி யும் கிடையாதா என்று கேள். ஒருவேளை, நாம் தொட்டதை அவர் சாப்பிடுவாரோ, என் னமோ!'' என்றாள்.

''ஏன், அம்மா, அப்படிச் சொல்லுகிறாய்? இவரும் நம் முடைய இனத்தைச் சேர்ந்தவர் தான்; மேலும் இவர் காந்திக் காரராச்சே!'' என்றான்.

'இந்த அழகான கையினால் விஷத்தைக் கொடுத்தாலும் சாப் பிடலாம்' என்ற மன நிலையில் அப்போதிருந் தான் மகுடபதி. அவனும் அவர்களுக் குச் சமீபமாய்ப் போய் உட்கார்ந்து கொண்டான்.

'' அழகுதான், கவுண்டரே! எனக்கு இப்போது இருக்கும் பசியில், உங்க ளுக்கு ஒன்றும் பாக்கி வைக்கமாட் டேன் — ஆமாம்; இதை யெல்லாம் எப்போது வாங்கிக் கொண்டு வந் தாய், பாட்டா? போலீஸ் கலாட்டாவுக்கு முன்னு லேயே வாங்கிக் கொண்டு வந்தா யாக்கும்! சாயங்காலந்தான் ஹோட்டல் எல்லாம் மூடி விட்டார்களே?''

அப்போது செந்திரு, மறந்து போனதைத் திடீரென்று நினைத் துக் கொண்டவள்போல் திடுக் கிட்ட தோற்றத்துடன், ''பாட்டா, நீ போன காரியத் தைச் சொல்லவே யில்லையே? கடுதாசியைக் கொடுத்தாயா?'' என்று கேட்டாள்.



"நானும் மறந்து விட்டேன், குழந்தை! பங்களாவைக் கண்டு பிடித்தேன், அவர்கள் ஊரில் இல்லையாம்; வீட்டுச் சேவகன் இருந்தான்..." என்று கிழவன் சொன்னவுடன், செந்திரு "ஐயையோ!" என்று அலறினாள். அவள் முகத்திலிருந்த குறுகுறுப்பு, புன்னகையெல்லாம் மறைந்து விட்டன.



"பாபு! வாயைத் திறந்து டிக்கட்டைக் காட்டுடா!...மாமா டிக்கட்டைப் பார்க்கணுமின்றார், பார்!"

அந்த முகத்தில் இப்போது பீதியும், சொல்வதற்கு முடியாத கவலையும் காணப்பட்டன. இதைப் பார்த்த மருடபதியும் பயந்து போனான்.

கிழவன் தொடர்ந்து, "நாளைக்கு அநேகமாக வந்து விடுவார்களாம். சேவகனிடம் கடிதத்தைக் கொடுத்து விட்டு வந்திருக்கிறேன்" என்றான்.

"நிச்சயமாக நாளைக்கு வந்துவிடுவார்களாமா?" என்று செந்திரு கேட்டாள்.

"நாளைக்கு வருவதாகச் சொல்லி விட்டுப் போனார்களாம். 'நிச்சயமாய் வருவார்களா?' என்று கேட்டதற்கு, அந்த நாய் குலைக்க ஆரம்பித்துவிட்டது. பேசாமல் வந்து விட்டேன்."

"ஐயோ! பாட்டா! அவர்கள் நாளைக்காவது வராமல் போனால் என்ன செய்வேன்? இதை யோசனை செய்யாமல் கிளம்பி விட்டேனே?" என்று அழுகை வரும் குரலில் செந்திரு சொன்னாள். அவள் கண்களில் நீர் தளும்பிற்று.

"நான் எத்தனையோ தடுத்துச் சொன்னேன்; நீ கேட்கவில்லை, குழந்தை! இருந்தாலும் பழநியாண்டவன் இருக்கிறார். நீ வருத்தப்படாதே" என்றான் கிழவன்.

இத்தனை நேரம் பேசாமல் கேட்டுக் கொண்டிருந்த மருடபதி ஆவலை அடக்க முடியாமல், "பாட்டா! என்ன சமாசாரம்? யாருக்குக் கடுதாசி? எதற்கு? என்னிடம் சொல்லலாமென்றால், சொல்லு! இன்றைய தினம் நீங்கள் எனக்கு அடைக்கலம் கொடுத்து என் உயிரைக் காப்பாற்றினீர்கள். இது உண்மையான விஷயம். இதற்காக என்னை நீங்கள் பயந்தவன் என்று பரிகாசம் செய்தாலும், உண்மையை மறைப்பதற்கு எனக்கு இஷ்டமில்லை" என்று சொல்லி, செந்திருவைக் கடைக்கண்ணால் பார்த்தான். மறுபடியும் கிழவன் பக்கம் திரும்பி, "என் உயிரைக் காப்பாற்றிய உங்களுக்கு நான் என்ன வேணுமானாலும் செய்யக் காத்திருக்கிறேன்" என்றான். அப்போது உணர்ச்சி மிகுதியினால் அவனுடைய தொண்டை அடைத்தது.

கிழவன் அப்போது செந்திருவை ஏறிட்டுப் பார்த்தான். "குழந்தை! இவரிடம் சொல்லலாமா? உன் அபிப்பிராயம் என்ன?" என்ற கேள்விகள் அவனுடைய பார்வையிலேயே இருந்தன.

செந்திரு, "பாட்டா! எனக்கு இவரை முன்பின் தெரியாது. உனக்கு நம்பிக்கை உள்ளவராயிருந்தால் சொல்லு" என்றாள்.

"செந்திரு! இந்தத் தம்பிதான் என்னை மனுஷனாக்கியவர். அதற்கு முன்னால் நான் வெறும் மிருகமாயிருந்தேன். கோயமுத்தூர் ஜில்லாவிலேயே என்னைப் போலக் குடிகாரன் கிடையாது. இந்தக் கர்ம காண்டத்தை விட்டொழிக்கும்படி செய்த புண்ணியவான் இந்த மருடபதிதான். ஒரு நாள் நல்ல போதையிலே நான் இருந்த

போது, இந்தப் பிள்ளை வந்து எனக்குப் புத்தி போதிக்க ஆரம்பித்தார். என் இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்து இவரைக் குத்தி விட்டேன். இவர் கைச் சட்டையை விலக்கினால், முழங் கையண்டை காயம் இன்னும் தெரியும்....''

இவ்விதம் சொல்லிப் பெரியண்ணன் மருடபதியின் கையைப் பிடித்து, சட்டையை மேலே விலக்கினான். முழங் கைக்குக் கீழே ஒரு பெரிய காயத்தின் வடு தெரிந்தது.

செந்திரு அதைப் பார்த்துவிட்டு, பரிதாபத்துடன், ''ஐயையோ! நீயா இப்படிச் செய்தே, பாட்டா! அப்புறம் என்ன ஆயிற்று?'' என்று கேட்டாள்.



## குருவாயூர் ஸுப்ரபாதம்

ஜகத்குரு ஸ்ரீ சிருங்கேரி சங்கராசாரிய ஸ்வாமிகள் சென்னைக்கு விஜயம் செய்திருந்தபோது, அவர் ஆசிகளுடன் ஏப்ரல் நாலாந் தேதி ''ஸ்ரீ குருவாயூரப்பன் ஸுப்ரபாத'' இசைத்தட்டு வெளியிடப்பட்டது. ஸ்ரீ குருவாயூரப்பன் ஸுப்ரபாதத்தை இனிமையாகப் பாடி இசைத்தட்டில் பதிவு செய்திருப்பவர் வித்வான் ஸ்ரீ வி. ராமச்சந்திரன். இந்த ஸுப்ரபாதத்தை இயற்றியவர் ஸரசகவி ஸ்ரீ கே. லக்ஷ்மிகாந்த சர்மா. இசை அமைத்தவர் ஸ்ரீ எஸ். வி. வேங்கடராமன். இந்த இசைத்தட்டு கிராமபோன் கம்பெனியாரின் வெளியீடு. குருவாயூர் ஸுப்ரபாதம் எங்கும் ஒலித்து மங்களம் பரப்புமாக!

''ஆமாம்; செந்திரு! போதையிலே இருக்கிற மனுஷன் என்ன வேணுமானாலும் செய்வான். அப்புறம் என்ன ஆச்சு என்று கேட்கிறாய்! இரத்தம் கொடகொடவென்று கொட்டிற்று. இவர் நினைவு தப்பிக் கீழே விழுந்து விட்டார். ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய்ப் போட்டார்கள். போலீஸ்காரர்கள் என்னை அரெஸ்ட் பண்ணிக் கொண்டு போனார்கள். கேஸ் நடந்தது.....''

''அது எப்படி, பாட்டா! சர்க்கார்தான் கள்ளுக்கடைக் கட்சியாயிற்றே? காந்திக் கட்சிக்காரரை நீ குத்தியதற்காக உன் பேரில் எப்படிக் கேஸ் போட்டார்கள்?'' என்று செந்திரு கேட்டாள்.

அப்போது மருடபதி குறுக்கிட்டு, ''போன வருஷம் மட்டும் இதற்கு மாறாயிருந்தது. காந்தி — இர்வின் ஒப்பந்தத்தின் பிரகாரம் சர்க்காரே கள்ளுக்கடை மறியலை அனுமதித்திருந்தார்கள். மறியலின் போது கலாட்டா நடக்காமல் போலீஸ் பந்தோபஸ்து போட்டிருந்தார்கள்'' என்று விளக்கிக் கூறினான்.

''சரி, அப்புறம் கேஸ் என்ன ஆயிற்று? உன்னைத் தண்டித்துவிட்டார்களோ?''

''அதுதானே இல்லை! இந்தத் தம்பியைக் கோர்ட்டுக்குச் சாட்சிக்குக் கூப்பிட்டிருந்தார்கள். தம்பி போலீஸுக்குச் சாதகமாகச் சாட்சி சொல்லவில்லை. 'கிழவன் சும்மாக் கத்தியை ஓங்கினான். நான் அதைத் தடுத்தேன். அப்போது தவறிக் கத்தி பட்டுவிட்டது. கிழவன் பேரில் தப்பே இல்லை' என்று சொல்லி விட்டார். என்னை ஜெயிலுக்கு அனுப்பாமல் இருப்பதற்காக இந்தத் தம்பி பொய்ச் சாட்சி கூடச் சொன்னார்....''

''இல்லவே, இல்லை, பாட்டா! நீ நிஜமாக நல்ல நினைவில் இருந்திருந்தால் என்னைக் குத்தியிருப்பாயா? போதையினால்தானே செய்தாய்? அதற்காக, கள்ளுக்கடை வைத்திருக்கும் கவர்ன்மெண்டைத் தண்டிப்பதைவிட்டு உன்னைத் தண்டிப்பதில் என்ன பிரயோசனம்?''

''தம்பி சாட்சி சொன்னதைக் கேட்ட போது நான் கோர்ட்டிலேயே அழுது விட்டேன். பழநியாண்டவர் அறிய, இனிமேல் குடிப்பதில்லை என்று அங்கேயே சத்தியம் செய்தேன். பீடையை அது முதல் விட்டு ஒழித்து விட்டேன். தம்பி அப்படிச் சாட்சி சொல்லியிரா விட்டால், இத்தனை நாட்கள் நான் ஜெயிலிலேயே இருப்பேன்'' என்று சொன்னபோது, கிழவன் கண்களிலிருந்து கரகரவென்று கண்ணீர் பொழிந்தது. (தொடரும்)

# சம்பு சங்கரரானர்!

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகளின் அருளுரை

'யோகம்' என்றால் சேர்க்கை என்று அர்த்தம். பேதமற்றுப் பரமாத்மாவுடன் சேர்க்கை பெறுவதுதான் யோகம். பலனில் பற்றில்லாமல் நிஷ்காம்ய கர்மம் செய்து அதன் மூலம் சித்த சுத்தி பெற்று, பக்தி உபாஸனை மூலம் ஈசுவரானுக்கிரகமும் பெற்றால் இறுதியில், இந்த அபேதமான யோக நிலையை அடையலாம். வேதத்தின் பரம தாத்பரியம் இதுவே. ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுனனுக்கு உபதேசித்த யோகம் இதுவே.

''பரம்பரையாக வந்த இந்த யோகமானது பின்னால் சிதிலமாகியது. அதைப் புனருத்தாரணம் பண்ணவே வந்திருக்கிறேன்'' என்றார் ஸ்ரீ கிருஷ்ண பகவான்.

பரமேசுவரன் வேறு கிருஷ்ணன் வேறு அல்ல. இருவரும் ஒருவரே. கீதையிலேயே கிருஷ்ண பகவான், தாம் விசுவரூபம் காட்டும் போது, ''என்னுடைய ஈசுவர ஸ்வரூபத்தைப் பார்'' என்கிறார்:

பச்ய மே யோகம் ஐச்வரம்

விசுவரூப தரிசனத்தில் லோகத்தை சம்ஹாரம் செய்யும் ருத்ர ஸ்வரூபத்தையே கிருஷ்ணன் காட்டினார்.

அவ்வாறு ஈச்வர அபேதமான ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு ஆதியில் ''ஜகத்குரு'' என்ற விருது உண்டு. ஸ்ரீ கிருஷ்ணன், ''பூர்வத்தில் இந்தயோகத்தை சூரியனுக்கு உபதேசித்தேன். மீண்டும் இப்போது கிருஷ்ணனாக உபதேசிக்க வந்தேன். எந்தெந்தக் காலத்தில் தர்மம் மிகவும் க்ஷீணிக்கிறதோ அப்போதெல்லாம் வருவேன்'' என்றார்.

ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் துவாபரயுக இறுதியில் நடந்தது. பிறகு கலியுகம் வந்தது. மறுபடியும் ஜீவபிரம்ம அபேத யோகத்துக்கு நலிவு உண்டாயிற்று. எழுபத்திரண்டு துர்மதங்கள் தோன்றின. அவை மிகப் பயங்கரமாகக் கிளம்பின. அசந்தர்ப்பமானவை எல்லாமே இப்படித்தான் ஆரம்பத்தில் தடபுடலாக இருக்கும். பிறகு இருந்த இடம் தெரியாமற் போகும்.

கலிகாலத்தில் இப்படி எழுபத்திரண்டு துர்மதங்கள் தோன்றி, வைதிக மதத்தை நலிவுற செய்வதைப் பரமேச்வரன் பார்த்தார். துவாபர யுகத்தில் ஏற்பட்ட நலிவு சாமானியமானதுதான். எனவே, ஏதோ சில சந்தர்ப்பங்களில் மட்டும் கிருஷ்ண பகவான் ஞானோபதேசம் செய்தால் போதுமானதாக இருந்தது. மற்றச் சமயங்களில் அவர் ஆயர்பாடியில் லீலை செய்தார்; துவாரகையில் ராஜ்ய பாரம் செய்தார்; பஞ்சபாண்டவர்களுக்காகத் தூது போனார். கலிகாலத்தில் இப்படிச் செய்தால் போதாது. அதிக இருட்டு இருப்பதால் நிறைய விளக்கு வேண்டும். ஒரு வாழ்நாள் முழுதும் ஞானோபதேசம் ஒன்றுக்காகவே அவதாரம் செய்ய வேண்டும் என்று பரமேசுவரன் எண்ணினார்.



சர்வ வித்தைகளுக்கும் நாயகனான அந்த சதாசிவனே ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதர்களாக அவதரித்தார். ஸ்ரீ சங்கராசாரியர்கள் சிவாவதாரமே என்பதற்கு வேதத்திலேயே ஆதாரம் இருக்கிறது. ஸ்ரீ ருத்ரத்தில், 'கபர்த்திக்கு நமஸ்காரம்; வ்யுப்த கேசனுக்கு நமஸ்காரம்' என்று அடுத்தடுத்து வருகிறது. 'கபர்த்தி' என்றால், 'ஜடாதாரி' என்று அர்த்தம். சிவபெருமானை ஜடாதாரியாகவே பொதுவில் காண்கிறோம். 'வ்யுப்த' என்றால் 'வபனம் செய்து கொண்ட' என்று அர்த்தம். 'வ்யுப்த கேசன்' என்றால் தலையை முண்டனம் செய்து கொண்டவன் என்று பொருள். ஜடாதாரியான சிவன் 'வ்யுப்த கேச'னாக இருந்தது எப்போது? ஸ்ரீ ஆதி சங்கரராக இருந்தபோதே !

பரமேசுவர மூர்த்தி ஆலமரத்தின் அடியில் தக்ஷிணாமூர்த்தியாக அசையாமல் இருந்தது.





அதற்கு 'சம்பு' என்று பெயர். 'சம்' என்றும் 'நித்ய சுகம்' என்று அர்த்தம். நித்ய சுகம் உற்பத்தியாகுமிடமே சம்பு. ஆனந்த ஊற்றே சம்பு. இந்த ஆனந்த ஊற்று இருந்த இடத்திலேயே இருக்கும். கண் பார்ப்பதில்லை. வாய் பேசுவதில்லை. ஆனால் அந்த மௌனத்திலிருந்தே சனகாதி யோகிகள் மகா உபதேசம் பெற்று பிரம்ம நிஷ்டை கைகூடினர். ஆனந்த ஊற்றைத் தேடிப் போய் இவர்கள் அதை மொண்டு குடித்தார்கள். மௌனம் தான் மகா உபதேசம். நமக்காக அந்த உத்கிருஷ்டமான மௌன நிலையை விட்டு ஜகத்குரு ஆதிசங்கர பகவத்பாதராக வந்தார் பரமேசுவரன்.

பதிவிரதா ரத்னமாக ஒருத்தியிருக்கிறாள். அவள் குரலைக்கூட யாரும் கேட்டதில்லை. அவள் வெளியில் வர, யாரும் பார்த்ததில்லை. அவளுடைய குழந்தை கிணற்றில் விழுந்து விடுகிறது! அப்போது அவள் வீட்டை விட்டு வெளியே வந்து கூப்பாடு போடுகிறாள். அப்படியே தக்ஷிணாமூர்த்தியாக இருந்த பரமேசுவரன் கலியில் தமது குழந்தைகளான ஜனங்கள் பாவப் படுகுழியில் விழுவதைப் பார்த்தார். 'தாம் மௌன உபதேச சம்புவாக — ஆனந்த ஊற்றாக — இருந்தால் இந்த யுகத்தில் பிரயோஜனம் இல்லை. ஊற்றைத் தேடி யாரும் வரமாட்டார்கள். ஆனந்தமே ஜனங்களைத் தேடிப் போக வேண்டும். ஆனந்தமாக **இருக்கும்** சம்பு ஆனந்தத்தைச் **செய்கிற** சம்கரராக (சங்கரராக) ஜனங்களிடையே போய் நித்திய சுகத்தை அவர்கள் கையில் எடுத்துத் தர வேண்டும்' என்று தீர்மானித்தார். சங்கராசாரியராக அவதரித்தார். இந்த வரிசைக்கிரமத்திலேயே ஸ்ரீ ருத்ரம் முதலில் சம்புவையும், பிறகு குருவான சங்கரரையும், அதன் பிறகு குரு உபதேசத்தால் பெறக்கூடிய பஞ்சாக்ஷரமூர்த்தியையும் நமஸ்கரிக்கிறது.

பூர்வ காலங்களில் அசுரர்கள் என்று தனியாக ஓர் இனத்தவர் வருவார்கள். அவர்களை சம்ஹரிக்க விஷ்ணு ஆயுதபாணியாக வருவார். இந்தக் கலியில் ராக்ஷசர்கள் **தனியாக** இல்லை. விசுவாமித்ரரின் யாகத்தைக் கெடுக்க ஸுபாஹு, மாரீசன் என்ற ராக்ஷசர் வந்ததாகவும், ஸ்ரீ ராமர் அவர்களை வதைத்ததாகவும் ராமாயணத்தில் படிக்கிறோம். இந்தக் கலியில் விசுவாமித்திரர் இருந்திருந்தால் அவர் யாகத்தைக் கெடுக்க ஸுபாஹு, மாரீசரே வேண்டியிராது. அவர் மூளையையே கெடுக்க அதனுள்ளே அசுரப் பிரவிருத்தி குடிகொண்டிருக்கும். அவர் யாகம் செய்யவே எண்ணியிருக்க மாட்டார். ஜனங்களின் மூளையிலேயே அசுரன் புகுந்துவிட்ட இந்தக் கலியில் யாரை சம்ஹாரம் பண்ணுவது? எனவே, அசுர சம்ஹாரத்துக்கான வைஷ்ணவ அவதாரங்கள் இப்போது வேண்டாம் என்று பரமேசுவரன் கருதி. ஞானோபதேசத்துக்காகத் தாமே அந்தணக் குடும்பத்தில் அவதரித்தார்.

சம்புவாக உட்கார்ந்திருந்த மூர்த்தி சங்கரராகச் சுற்றும் மூர்த்தியாயிற்று. எவ்வளவுக்கெவ்வளவு உட்கார்ந்திருந்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு சஞ்சாரம் செய்தார். எவ்வளவுக்கெவ்வளவு மௌனமாக இருந்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு பேசினார், உபதேசித்தார், வாதம் செய்தார், பாஷ்யம் செய்தார்.

ஸ்ரீ ஆதிசங்கரரின் மகிமை, அவருக்கு முன்பிருந்த எழுபத்திரண்டு மதங்களில் எதுவுமே அவருக்குப் பின்பு பாரத தேசத்தில் இல்லாமற் போனதுதான். அவர் கண்டனம் செய்த சாங்கியம், வைசேஷிகம் போன்ற சில மதங்களைப் பற்றிப் புத்தகங்களிலிருந்துதான் தெரிந்து கொள்ள முடிகிறது. காபாலிகம், வாமாசார சாக்தம் போன்ற கோர மதங்களைப் பற்றி பழைய இடிபாடு (Ruins), புதைபொருள் இவற்றிலிருந்து தெரிந்து கொள்கிறோம். வேத கர்மானுஷ்டானத்தைச் சொல்லாமல் ஆத்மகுணங்களை மட்டும் சொல்லும் புத்த மதம் முதலிய சில மதங்களை மற்ற நாடுகளுக்காக விட்டு வைத்திருக்கிறார் ஸ்ரீ சங்கர பகவத்பாதர். அவையும் நம் நாட்டில் அவர் காலத்துக்குப் பின் இல்லாமல் போயின. சொற்ப காலத்துக்குள் தத்வம் ஒன்றையே அடிப்படையாக வைத்து, மற்ற மதங்களை எல்லாம் ஜயித்து அத்வைதத்தை ஆசாரியர்கள் நிலைநாட்டியதைப் போன்ற மகத்தான காரியத்தைச் செய்தவர் உலகில் எவருமே இல்லை.

ஸ்ரீ சங்கரபகவத்பாதர்களுக்குப் பிற்பாடு நம் நாட்டில் வேறு சம்பிரதாயங்கள் ஏற்பட்டாலும், ஸ்ரீ சங்கரர் ஸ்தாபித்த அத்வைத மதம் போய்விடவில்லை. இன்றும் அத்வைதிகள் இருக்கிறோம்.

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர் வேதம் முழுமையையும் ஒப்புக் கொண்டார். வேதம் கூறும் சகல தெய்வங்களையும், வேதம் விதிக்கும் சகல கர்மங்களையும் ஒப்புக் கொண்டார். அவற்றின் லட்சியமாக, வேதத்தின் முக்கிய தாத்பரியமான, 'ஜீவனும் பிரம்மமும் ஒன்றே' என்ற அத்வைதத்தை ஸ்தாபித்தார். ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பிறகு வைதிக தர்மத்தை நிலைநாட்டிய ஆதிசங்கரரும் ''ஜகத்குரு'' என்ற விருதைப் பெற்றார்.

வைசாக சுக்லபட்ச பஞ்சமி ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளின் அவதார தினம். அப்





பொழுது நக்ஷத்திரம் சிவபெருமானுக்குரிய திருவாதிரையாகவோ, அல்லது ஸ்ரீ ராமனுக்குரிய புனர்வஸுவாகவோ அமையும். ஸ்ரீ ஆதி சங்கர ஜயந்தியானது மற்ற ஜயந்திகளைவிடப் பெரிய புண்ணிய காலம் என்று நான் நினைப்பது வழக்கம். இப்படி நான் சொல்வதற்கு உங்களுக்கு இரண்டு காரணங்கள் தோன்றலாம். 'நம்முடையது' என்ற அபிமானத்தால் சொல்கிறேனோ என்பது ஒன்று. இப்போது பேசப்படுவது ஸ்ரீ சங்கர ஜயந்தியாதலின், அதனைச் சற்று உயர்த்திப் பேசுகிறேனோ என்பது இரண்டாவது. இந்த இரண்டையும் தவிர வேறு ஒரு முக்கியமான காரணத்தாலேயே ஸ்ரீ சங்கர ஜயந்தியை ஸர்வ உத்கிருஷ்டமான புண்ய காலம் என்கிறேன்.

அது என்ன காரணம்? ஸ்ரீ சங்கர அவதாரத்துக்கு முன் வைதிக மதம் ஆட்டம் கண்ட போது அது வரை வேத புராணங்களால் விதிக்கப்பட்ட புண்ணிய காலங்கள் எல்லாம் தத்தளித்தன. அப்போது ஸ்ரீ சங்கர ஜயந்தி நிகழ்ந்ததால்தான் அந்தப் புண்ணிய காலங்கள் எல்லாம் மீண்டும் நிலைநிறுத்தப்பட்டன. ஸ்ரீ சங்கர ஜயந்தி நிகழ்ந்திராவிடில், இன்று ஸ்ரீ ராமநவமியும், கோகுலாஷ்டமியும், சிவராத்திரியும், மற்ற புண்ணிய தினங்களும் கொண்டாடுவோமா என்பதே சந்தேகம். ஆகையினால்தான் ஸ்ரீ சங்கர ஜயந்தியை மிக மிகப் புண்ணிய காலமாகச் சொல்கிறேன். தனிமனிதர் ஒருவராக இருந்து கொண்டு அந்த சாமானிய பிராமண சந்நியாசி தேசத்தில் திக்விஜயம் செய்து இந்த மகத்தான அனுக்கிரகத்தைச் செய்தார். 'திக்விஜயம்' என்றால் அவர் செய்ததுதான் 'திக்விஜயம்'.

ஸ்ரீ ஆசார்யாளுடைய திக்விஜய மகிமையைக் கேட்டதற்குப் பிரயோஜனமாக நாம் அனைவரும் நம் மனத்தில் உள்ள அசட்டுத்தனங்களைப் போக்கி, நமக்குள் நாமே திக்விஜயம் செய்ய வேண்டும். பஜகோவிந்தத்தில் ஆரம்பித்துப் பரமாத்ம தத்துவத்தில் முடிவது ஸ்ரீ ஆசார்யாள் உபதேசம். ''ஒன்றும் தெரியாவிட்டாலும் பரவாயில்லை, கோவிந்த கோவிந்த என்று சொல்'' என்கிறார் ஆசார்யாள். ''யமன் ஒரு க்ஷணம் கூட வீண் கழிப்பதில்லை. பிரதி க்ஷணமும் நெருங்கி வருகிறான். எப்போது பிடித்துக் கொள்வானோ தெரியாது. கோவிந்தன் காலைக் கட்டிக் கொண்டாலே கவலை இல்லை'' என்றார். எப்போதும் கோவிந்தா கோவிந்தா என்று சொல்லிப் பழக வேண்டும். எப்படியும் போஜனம் செய்கிறோம். அதோடு, சாப்பிடுகையில் 'கோவிந்த கோவிந்த' என்று சொல்லிக் கொண்டே உண்டால் அந்த மனோபாவத்துடன் உள்ளே போகும் அன்னம், ஆத்ம தியானத்துக்கு அநுகூலம் செய்யும். அந்த அன்ன சாரம் உடம்பில் சேரச் சேர ஈச்வர ஸ்மரணம் அதிகமாகும். நாம் என்றைக்கும் போஜனத்தை நிறுத்தப் போவதில்லை. ஆதலினால் இந்தச் சின்ன அப்பியாசத்தால் கோவிந்த உச்சாரணம் என்றும் நடந்து வரும். கோவிந்த உச்சாரணத்துடன் சாப்பிடுகையில் மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசுவதை நாமே நிறுத்துவோம். கண்ட வஸ்துக்களை கோவிந்த நாமத்துடன் உண்ணக் கூடாது என்ற கட்டுப்பாடும் வரும். சித்தம் சுத்தமாவதற்கு ஆகாரம் சுத்தமாயிருப்பது மிக அவசியம். பல இடங்களில் பலவிதமான வஸ்துக்களைப் புசிப்பதே இன்றைய மனக் கோளாறுகளுக்கு ஒரு முக்கியமான காரணம்.

ஆசார்யாள் மகிமை கேட்டதற்கு அடையாளமாக இப்படிச் சின்ன விஷயங்களையாவது அநுஷ்டானத்தில் கொண்டு வரவேண்டும். எல்லோரும் காலையில் சிறிது விஷ்ணு ஸ்மரணம், மாலையில் சிறிது சிவ ஸ்மரணம் செய்ய வேண்டும். இரவில் தூங்கும் முன்பு அம்பாளைப் பிரார்த்திக்க வேண்டும். அன்றைய தினம் ஆத்ம க்ஷேமமாகவோ, பரோபகாரமாக ஜீவகாருண்ய சேவையோ ஏதேனும் செய்தோமோ என்று ஆராய்ந்து பார்க்க வேண்டும். ''அம்மா, இன்று வரை நான் செய்த தப்புக்களை மன்னித்து, நாளையிலிருந்தேனும் இந்தத் தப்புக்களைச் செய்யாமல் ரட்சிப்பாய்'' என்று காமாக்ஷியை மனமுருகி வேண்டிக் கொண்டு தூங்க வேண்டும்.

இன்று நம்மிடை இப்படிப்பட்ட சிறிய, பெரிய அநுஷ்டானங்கள் பலவும் வந்திருப்பதற்குக் காரணமான ஸ்ரீ ஆதி ஆசார்யாளை என்றைக்கும் மறக்கக் கூடாது. நவராத்திரி, கோகுலாஷ்டமி போல் ஸ்ரீ ஆசாரிய ஜயந்தியைக் கொண்டாட வேண்டும். ஆசாரிய பாதுகையைத் தினமும் பூஜிக்க வேண்டும். ஸ்ரீ ஆசார்யாள் அநுக்கிரகத்தில் சகல மங்களங்களும் உண்டாகும்.

---

ஸ்ரீ ஆதிசங்கரர் பாலப் பிரம்மசாரியாக பிட்சை எடுத்து வரும்போது ஓர் ஏழை அந்தணரின் இல்லத்துக்குச் சென்றார். இந்தப் புண்ணிய மூர்த்திக்குப் பிட்சை இடுவதற்கு அந்த இல்லாளிடம் ஏதுமே இல்லை. ஆனால் இந்தத் தெய்வக் குழந்தையிடம் பக்தியும் அன்பும் அவள் இதயத்தில் கடலாகப் பொங்கின. வீட்டில் தேடித் தேடி எங்கோ ஒரு புரையில் இருந்த ஒரே ஒரு நெல்லிக்கனியைக் கொண்டு வந்து பால சங்கரனின் பிட்சா பாத்திரத்தில் இட்டாள் அந்த மாது. அவளது இதய மாதுர்யம் குழந்தையின் கருணை நாடியைக் கண்டுவிட்டது. கருணை கவிதையாயிற்று. ஏழை அந்தண மாதுக்கு அருள்பாலிக்குமாறு மகாலக்ஷ்மியைப் பிரார்த்தித்து, 'கனகதாராஸ்தவம்' பாடினார் பாலசங்கரர். மனமகிழ்ந்த மாதவன் தேவி பொன் நெல்லிக் கனிகளாகவே அவ்வீட்டில் அருள் மழை — பொருள் மழை — பொழிந்தாள். ஏப்ரல் 29ந் தேதி நிகழும் ஸ்ரீ சங்கர ஜயந்தியை முன்னிட்டு இவ்விதழ் அட்டை இப்புனித நிகழ்ச்சியைத் தாங்கி வருகிறது.

# ஆயிரத்தைக் கண்டவர்

**வி**ண்ணையளாவும் அழகிய கோபுரங்களைக் கொண்ட மதுரை மீனாட்சி அம்மன் கோயில். அருள் பாலித்திடும் அங்கயற்கண்ணியின் சந்நிதானத்தில், ஐந்து வயதுப் பாலகன் கண்மூடி நின்று பாடினான்: 'எப்படிப் பாடினரோ' என்று.

சிறுவன் பாடுவதற்கு முன்பு, அவன் கோயிலுக்குள் வரும்போது, சுந்தரேசனின் சந்நிதியில் தேவாரப் பாடல்கள் முழங்கின; தாயுமானவரின் ஆனந்தக்களிப்பை யாரோ பாடிக் கொண்டிருந்தார்கள்....

தெய்வப் பாடல்களைக் கேட்ட சிறுவன், அம்பாள் முன் பாடிவிட்டான்! அன்று அவன் கோயிலில் பாடிய பாட்டைத்தான் இன்று இசையரங்குகளில் பாடகர்களும் பாடகியரும் கர்நாடக தேவகாந்தாரி ராகத்தில் பாடிக் கொண்டிருக்கிறார்கள்!

அந்தச் சிறுவன்தான் — கவியோகி சுத்தானந்த பாரதியார். இன்று சுத்தானந்த பாரதியாரைப் பற்றி நாம் நினைக்கையிலேயே "எப்படிப் பாடினரோ?" என்றுதான் கேட்கத் தோன்றுகிறது. பத்தா, நூறா, ஆயிரமா? பதினாயிரத்துக்கு மேற்பட்ட கவிதைகளை எழுதிக் குவித்திருக்கிறார் கவியோகி.

## எப்படிப் பாடினரோ?

புதுச்சேரி அரவிந்த ஆசிரமத்திலிருந்த போது, கால் நூற்றாண்டு மௌன விரதம் பூண்டு வாழ்ந்தவர்தான் சுத்தானந்த பாரதியார். ஆயினும் என்ன, அவர் பேசிக் கொண்டிருந்த காலங்களில் அவர் பல பெரியார்களைச் சந்தித்து அளவளாவி அவர்களுடன் தங்கியிருக்கும் பாக்கியம் பெற்றவர்.

சுத்தானந்த பாரதியார், திலகருடன் சாயிபாபாவை (சிர்டி) தரிசித்துப் பேசிவிட்டு வந்திருக்கிறார்! அரவிந்தர், ரமணர், காந்தியடிகள், வ. வே. சு. ஐயர், மகா கவி பாரதியார், வ. உ. சி., அரவிந்த ஆசிரம அன்னை, மெகர் பாபா முதலியோருடன் உரையாடியவர். மேலும் கூறினால் பட்டியல் நீளும்.

செல்வக் குடும்பத்தில் பிறந்து, வேங்கட சுப்பிரமணியன் எனப் பெயரிடப்பட்டிருந்தார். பாஸ்கர சேதுபதியின் நண்பரான தாய் மாமா பெரும் செல்வந்தர். கணக்காரம் எடுத்துக் கொள்ளவிருந்தார். இரும்புப் பெட்டியில் கண்ட பொற் காசுகளை வீதியில் பரதேசிக்குப் போடப் போனவனை மாமா தடுத்து நிறுத்தி, கண்டித்தார். பலவாறு பேசினார். சிறுவன், மீனாட்சி அம்மன் கோயிலுக்கு ஓடி அம்பாள் சந்நிதி அடைந்து பாடினான். தெய்வ சக்திதான் பாட வைத்தது போலும்!

நூற்றைம்பது வயதடைந்த இமாலய யோகி ஞானசித்தர் உபதேசம் செய்து 'சுத்தானந்தன்' எனப் பெயர் வைத்து ஆசி கூறினார்.

யோகி ஞானசித்தர், இராமகிருஷ்ண பரமஹம்சர், தயானந்த சரஸ்வதி, சுவாமி இராம தீர்த்தர், வடலூர் இராமலிங்க அடிகள் ஆகியோரைக் கண்டு பேசிய பெரியவராம்.

சுத்தானந்தருக்கு ராமநாதபுரம் பூச்சி ஐயங்காரிடம் சங்கீத சிட்சை. சிவகங்கை ஜமீன்தாருக்குத் தமிழாசிரியராயிருந்த தெய்வசிகாமணிப் புலவரிடம் முறையாகப் பாடம்; அமெரிக்கன் கல்லூரிப் பிரின்சிபாலாக இருந்த ஜாம்போ என்பவரிடம் ஆங்கிலமும், வாலஸ் துரையிடம் பிரெஞ்சு, ஜெர்மன் ஆகியவற்றையும் கற்றுக் கொண்டார்.

எழுபத்தைந்து வயதிலும் இளமையாகத் தென்படுகிறார் என்றால், கவியோகியின் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை நெறிதான் காரணம். "ஆறு மணி நேரம் தியானம், ஆறு மணி நேரம் படிப்பு, ஆறு மணி நேரம் எழுத்து — படிப்பு, மீதி ஆறு மணி நேரம் ஓய்வு!" என்று தம் தினசரி வழக்கத்தைக் கூறுகிறார்.

சுத்தானந்த பாரதியார் எழுதியிருக்கும் கவிதைகள் — நூல்வடிவில் வந்தவை மட்டும் ஆயிரத்துக்கும் அதிகம். இவை தவிர, ஆங்கிலத்தில் இரண்டாயிரம் பாடல்கள், பிரஞ்சு மொழியில் ஐயாயிரம் கவிதைகள்! தமிழ்ப் பத்திரிகைகளில் ஆயிரத்துக்கும் அதிகமான கவிதைகள்! பிரசுரமாகாமல் இருப்பவை வேறு!

பிரெஞ்சுக் கவிதைகளை பாரிசில் வெளியிட ஏற்பாடு நடைபெற்று வருவதாய் சுத்தானந்த பாரதியார் தெரிவிக்கிறார்.

விக்டர் ஹ்யூகோவின் 'ஏழை படும் பாடு' நாவின் மொழிபெயர்ப்பு இவருடையதே.

அடையாற்றில் உள்ள யோக சமாஜத்தில் தம்மைத் தேடி வருபவர்களின் யோகம் சம்பந்தமான சந்தேகங்களுக்கு விளக்கம் தருகிறார்; யோகாசனங்களில் பயிற்சி கொடுக்கிறார். தியான முறைகளையும் சொல்லித் தருகிறார்.

தினமும் படுக்கப் போகுமுன் ஒரு கவிதையைத் தவறாமல் எழுதி வரும் இந்தத் தவயோகி தனியொரு மனிதர் மாதிரியே தெரியவில்லை; கவிதா இயக்கமாகவே தோன்றுகிறார்!

பேட்டி: ஏ. சுவாமிநாதன்



# ராமாயணம்

ராஜாஜி

## 86. நாகபாணங்கள்

கடல் போன்ற பெரும் வானர சேனையைக் கொண்டு ராமன் லங்கையை நான்கு பக்கங்களிலும் சூழ்ந்து முற்றுகையிட்டிருப்பதை ராவணனுக்கு அவனுடைய ஆட்கள் சொன்னார்கள். அவனுக்குக் கோபம் மேலிட்டு மாளிகை ஏறிப் பார்த்தான். அவர்கள் சொன்ன வண்ணம் நான்கு பக்கங்களிலும் மரங்களையும் கற்பாறைகளையும் எடுத்துக் கொண்டு சூழ்ந்து நின்ற வானரர்களைப் பார்த்தான். இவர்களை எப்படி அழிப்பது என்று ஆலோசித்தான்.

ராமனும் அச்சமயம் ராக்ஷசப் படையால் காக்கப்பட்ட லங்கா நகரத்தைப் பார்த்தான். "இந்த மதிலுக்குள்ளே அல்லவா சீதை சிறைப்பட்டு வாடி வருகிறாள்?" என்று எண்ணிக் கோபம் மேலிட்டு வானரர் படைக்கு உத்தரவிட்டான். "கோட்டையைத் தாக்குங்கள். அரக்கர்களைக் கொல்லுங்கள்! தயங்க வேண்டாம்!" என்றான். அவர்களும் உற்சாகமாக யுத்தம் ஆரம்பித்தார்கள்.

"வானர ராஜனுக்கு ஜெயமங்களம்! ராம லக்ஷ்மணர்களுக்கு வெற்றி! வீழ்க அரக்கர்கள்!" என்று பெருங் கோஷம் செய்து சிலர் மலைகளை உடைத்துப் பெரும் பெரும் பாறைகளை எடுத்து வீசி மதிலைத் தாக்கினார்கள். சிலர் பெரிய மரங்களை வேரோடு பிடுங்கி எடுத்து அரக்கர்களைத் தாக்கினார்கள். மதிலையும் மதில் வாயிலையும் தாக்கித் தகர்க்க ஆரம்பித்தார்கள்.

இதைக் கண்டு ராவணன் ஒரு பெரும் படையை ஏவினான். "உடனே வெளியில் சென்று இந்த வானரர்களை வதம் செய்யுங்கள்" என்று அவன் உத்தரவிட்டதும் பேரிகை ஓசையும், சங்க நாதங்களும், ராட்சஸ வீரர்களுடைய கோஷங்களும் சமுத்திரத்தைப் போல் கிளம்பின. அரக்கப் படையாளர் சகல ஆயுதங்களுடன் நகரத்திலிருந்து வெளியே சென்று வானரர்களுடன் கோர யுத்தம் நடத்தினார்கள்.

வானரர்களும் தங்கள் ஆயுதங்களாகிய பாறைகள் கற்களும் மரங்களும் நகங்களும் முஷ்டிகளும் உபயோகித்து ராக்ஷசர்களை எதிர்த்தார்கள். இரு பக்கத்திலும் ஆயிரக் கணக்கான பிரேதங்கள் விழுந்தன. பூமி முழுதும் ரத்தச் சேறும் வெட்டப்பட்ட அவயவங்களும் மாமிசத் துண்டங்களுமாகக் கோர யுத்தம் நடந்தது.

இதைத் தவிர வீரர்களோடு வீரர்கள் கைகலந்து துவந்த யுத்தங்களும் நடைபெற்றன. அங்கதனும் இந்திரஜித்தும் ருத்திரனையும் யமனையும்போல் தனிச் சண்டையிட்டார்கள். ப்ரஜங்கன் என்ற ராட்சசனுக்கும் விபீஷணனுடைய மந்திரியான சம்பாதிக்கும் யுத்தம் நடந்தது. ஜம்புமாலியும் ஹனுமானும் ஒருவரையொருவர் எதிர்த்தார்கள். அப்படியே நீலனும் நிகும்பனும், லக்ஷ்மணனும் விரூபாக்ஷனும். இன்னும் பலர் இம்மாதிரித் தனிச் சண்டை செய்தார்கள்.

இந்திரஜித்தினுடைய தேரும் குதிரைகளும் நாசமாயின. அங்கதனும் இந்திரஜித்தின் கதாயுதத்தால் அடிபட்டான். ஜம்புமாலி அனுமானைச் சக்தியால் அடித்தான். மாருதி ஜம்புமாலியின் ரதத்தைப் பொடியாக்கினான். அரக்கர்கள் அம்புகள் எய்து ராமனை எதிர்த்தார்கள். ராமனும் பல அரக்கர்களைத் தன் பாணங்களால் கொன்றான்.

வித்யுன்மாலி சுஷேணன் பேரில் பாணங்கள் விட்டான். சுஷேணன் ஒரு பெரிய பாறையை எடுத்து அரக்கனுடைய ரதத்தைத் தூளாக்கினான். வித்யுன்மாலி கதாயுதம் எடுத்துக் கொண்டு பூமியில் குதித்து சுஷேணனைத் தாக்கினான். சுஷேணன் ஒரு பெரிய கல்லை எடுத்து அரக்கனை அடித்து நசுக்கிக் கொன்றான். இப்படியே இன்னும் பல வீரர்கள் யுத்தம் செய்து பலர் மாண்டார்கள். பகல் முழுதும் சண்டை நடந்தது. ராத்திரியாயினும் நிறுத்தாமல் அரக்கர்கள் போர் நடத்தினார்கள்.

ராத்திரி யுத்தம் வெகு கோரமாக நடந்தது. ரத்தம் ஆறாகப் பெருகிற்று. இரு பக்கத்திலும் பலர் மாண்டார்கள்.

இந்திரஜித்தை அங்கதன் தாக்கினான். அரக்கனுடைய குதிரைகளையும் சாரதியையும் கொன்று தேரையும் பொடியாக்கினான். வானரர்கள் அங்கதனுடைய சாமர்த்தியத்தைக் கண்டு உற்சாகம் அடைந்து ஜெயகோஷம் செய்தார்கள். வானர யுவ ராஜனுடைய

தைரியத்தையும் பலத்தையும் சாமர்த்தியத்தையும் பார்த்துச் சேனையிலிருந்த வீரர்கள் அனைவரும் புகழ்ந்தார்கள். தேரை இழந்த இந்திரஜித்துக்குக் கோபாவேசமாகி, தன் மாய வித்தைகளை உபயோகிக்க ஆரம்பித்தான்.

மந்திரத்தினால் யாருக்கும் காணப்படாமல் மறைந்து நின்று யுத்தம் செய்தான். ராம லக்ஷ்மணர்கள் மேல் பலவித பாணங்களைப் பிரயோகித்து அவர்களை உபத்திரவப்படுத்தினான். பல வீரர்கள் அவன் இருக்கும் இடத்தைத் தேடித் தேடிப் பார்த்தார்கள். மாய மந்திரத்தின் சக்தியால் மறைந்து நின்ற ராவண குமாரனை அவர்களால் காண முடியவில்லை. அவன் சரமாரி பெய்து கொண்டேயிருந்தான்.

பிறகு ராம லக்ஷ்மணர்களின் பேரில் நாக பாணங்கள் எய்தான். அதனால் அவர்கள் கட்டுண்டு அசைய முடியாமல் யுத்த பூமியில் வீழ்ந்தார்கள். ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டே இன்னது செய்வது என்று தோன்றாமல் திகைத்தார்கள். ராமனுடைய நிலையைப் பார்த்து லக்ஷ்மணன் மிகவும் துக்கப்பட்டான். வானரர்கள் சூழ்ந்து கொண்டு பிரலாபிக்கலானார்கள்.

இந்திரஜித் ராக்ஷச சேனையைப் பாராட்டிவிட்டு லங்கா நகரம் சென்றான். வெற்றிக் கொண்டாட்டத்தோடு தகப்பனிடம் போய் ''ராம லக்ஷ்மணர்களின் காரியம் முடிந்தது. யுத்த பூமியில் பிரக்ஞையற்றுக் கிடக்கிறார்கள். என்னால் வதம் செய்யப்பட்டார்கள்'' என்று சொன்னான். ராவணன் மகிழ்ச்சி பரவசமானான். குமாரனைக் கட்டியணைத்துக் கொண்டு ''வீரனே!'' என்று புகழ்ந்தான்.

வானர வீரர்கள் உட்பட எல்லாரும் காயமடைந்து தைரியமிழந்து, ராஜ



குமாரர்கள் விழுந்து கிடப்பதைப் பார்த்துத் தோற்றோம் என்று நிச்சயம் செய்து கொண்டு இன்னது செய்வது என்று தெரியாமல் திகைத்தார்கள். சுக்ரீவன் திகைத்து நின்றதை விபீஷணன் பார்த்தான். ''இது தகாது; ராம லக்ஷ்மணர்கள் முகங்களைப் பாருங்கள். பொலிவு குறையவில்லை. பயப்படாதீர்கள். சீக்கிரத்தில் இந்த மயக்கம் தீர்ந்து மறுபடியும் யுத்தம் செய்ய முனைவார்கள்'' என்று சொல்லி வானர ராஜனைத் தைரியப் படுத்தினான். வானரர்கள் பயந்து போகாமலிருப்பதற்கு வேண்டிய காரியங்களைச் செய்யத் தொடங்கினார்கள். சிதறிப்போயிருந்த சேனையை மறுபடியும் ஒழுங்குபடுத்தி ஜாக்கிரதையாக அணிவகுத்துக் காத்து நின்றார்கள்.

இந்திரஜித்தால் ராம லக்ஷ்மணர்கள் வதம் செய்யப்பட்டார்கள் என்று ராவணன் லங்கா நகரத்தில் விளம்பரப்படுத்தினான். ராக்ஷஸிகளை அழைத்து, ''உடனே போய்ச் சீதைக்குச் சொல்லுங்கள். இராமன் இறந்தான், இரு ராஜ குமாரர்களும் யுத்த பூமியில் தரையில் மாண்டு கிடக்கிறார்கள். அவர்களுடைய வானர சேனைகள் அழிக்கப்பட்டன என்று சொல்லுங்கள். மாய புஷ்பக விமானத்தில் அவளை ஏற்றிக் கொண்டு நீங்களும் போங்கள். போய் யுத்தத்தின் நிலையைச் சீதைக்குக் காட்டுங்கள். அந்தப் பிடிவாதக்காரிக்கு இப்போது விளங்கும். என்னைத் தவிர வேறு ஆதரவு இல்லை என்று தெரிந்துகொண்டு என்னைச் சேருவாள்'' என்றான்.

அந்த ராக்ஷஸிகள் அப்படியே செய்தார்கள். ஜானகி யுத்த பூமியை ஆகாயத்தில் விமானத்திலிருந்து பார்த்தாள். பார்த்துத் துக்கக் கடலில் மூழ்கினாள். ராம லக்ஷ்மணர்கள் தரையில் அசைவற்றுக் கிடப்பதையும் அவர்கள் அருகில் அவர்களுடைய ஆயுதங்கள் பிடிப்பாரின்றிச் சிதறிக் கிடப்பதையும் பார்த்தாள். இனி தனக்கு ஒரு கதியுமில்லை என்று எண்ணிப் பிரலாபித்தாள். ''வருங்கால விஷயம் அறிந்தவர்கள் என்னைப் பற்றிச் சொல்லியதெல்லாம் பொய்யாயிற்றே! புருஷன் மாண்டு போவான்; நான் விதவையாவேன் என்று அவர்கள் சொல்லவில்லையே! மக்களைப் பெறுவேன்; பட்டமகிஷியாயிருப்பேன் என்றெல்லாம் அவர்கள் சொன்னது முற்றிலும் பொய்யாயிற்றே! ஐயோ, கௌசல்யே! குமாரன் வருவான் வருவான் என்று எதிர்பார்த்தவண்ணம் இருக்கும் அவளுடைய துக்கத்தை யார் தீர்ப்பார்கள்? கடலைத் தாண்டி வந்து குளப் படியில் மூழ்கி உயிர் நீத்தது போலாயிற்றே. உங்களுடைய திவ்விய அஸ்திரங்கள் எல்லாம் என்னவாயிற்று? எந்த எதிரியும் உங்களை வெல்ல முடியாது என்றார்களே! எல்லாம் பொய்யாயிற்றே!'' என்று பிரலாபித்தாள். அப்போது சீதைக்குத் துணையும் காவலுமாக இருந்த ராக்ஷஸிகளில் ஒருத்தியான திரிஜடை சீதைக்குத் தைரியம் சொன்னாள். ''பிரியமான சீதையே! நீ ஒன்றும் துக்கப்பட வேண்டாம். உன் புருஷனாவது லட்சுமணனாவது இறக்கவில்லை. முக லக்ஷணங்களைப் பார். இறந்தவர்களின் முகம் வேறு விதமாக இருக்கும். அவர்கள் மாயாஸ்திரத்தினால் கொஞ்ச நேரம் கட்டுண்டிருக்கிறார்கள். சேனை ஒழுங்கைப் பார். நீ தைரியமாக இருக்க வேண்டும். இந்தக் காட்சியைக் கண்டு பயப்பட வேண்டாம்'' என்றாள். அமிருதம் போன்ற இந்த வார்த்தையைக் கேட்டு சீதை மறுபடியும் தைரியமடைந்தாள். பிறகு விமானம் இலங்கைக்குத் திரும்பிச் சென்றது. சீதை மறுபடியும் அசோக வனத்தில் விடப்பட்டாள். அங்கே ராக்ஷஸிகள் மத்தியில் துயரத்தில் மூழ்கிக் கிடந்தாள். (தொடரும்)

---

## விநோத சம்பிரதாயம்



மத்திய சைனாவில் நதி ஒன்றில் படகு சென்று கொண்டிருந்தது. படகு நகரும் சமயம் படகோட்டி ஒவ்வொருவர் காதிலும் ஏதோ ஒன்றை முணுமுணுத்துக் கொண்டே சென்றான். ஓர் அமெரிக்கனும் படகில் இருந்தான். அவன் அருகிலுள்ள ஆங்கிலம் அறிந்த சீனன், ''படகு பாலத்தினடியில் செல்லவிருக்கிறது. அந்தப் பாலத்தைக் கடக்கும் வரையில் நாம் படகில் பேசக்கூடாது!'' என்று படகோட்டியின் கோரிக்கையை எடுத்துரைத்தான். அமெரிக்கன் வாய் மூடி அதிசயத்துடன் அமர்ந்திருந்தான். படகு பாலத்தைக் கடந்ததும் அமெரிக்கன் ஆவலுடன் தன் அருகிலுள்ள சீன நண்பனிடம், ''ஆமாம்! படகு பாலத்தைக் கடக்கும்போது ஏன் பேசக்கூடாது?'' என்று கேட்டான்.

''படகு பாலத்தைக் கடக்கும்போது பேசினால் நதி தேவதையை அவமதித்ததாகும். அதனால் அவளது பெருங் கோபத்துக்குப் படகு உள்ளாக நேரிடும் என்று இந் நதியில் செல்லும் படகோட்டிகள் நம்புகிறார்கள்'' என்று அங்குள்ள விநோதப் பழக்கத்தை எடுத்துரைத்தான் சீனன். — பி. எஸ். எம்.

# "மண்ணிலே வீழ்ந்தவுடன் ...

'கவிதை துக்கத்தின் சகோதரி; துக்கம் துய்ப்பவன் ஒவ்வொருவனும் கவிஞனே; ஒவ்வொரு கண்ணீர்த் துளியும் ஒரு செய்யுள்; ஒவ்வொரு இதயமும் ஒரு காவியம்'— என், அறிஞர் ஆண்ட்ரே என்பவர் சொல்வது எத்தனை உண்மையா யிருக்கிறது!

மவுண்ட் ரோடு ரவுண்டாணா.

நாற்சந்தி. நவ நாகரிகமான கடைகளும் திரைப்பட அரங்குகளும் கொலு வீற்றிருக்கும் சூழ்நிலை. செல்வச் சீமான்கள் நடமாடும் தெருக்கள். —அங்கே கையிலே குழந்தை ஏந்தி கண்ணில்



லாத பிச்சைக்காரி கோலின் உதவியால் நடந்து வருகிறாள். பார்க்கப் பரிதாபமான நிலை. தன் வயிற்றைக் கழுவக்கூடக் கதி இல்லாத அவளுக்கு எவனோ ஒரு காமாந்தகாரன் பசப்பிக் குழந்தை யெனும் பாரத்தைச் சுமக்க வைத்து விட்டான். 'சட்டி சுட்டதடா கை விட்டதடா' என்று கை விட்டுவிட்டுப் போய் விட்டான். ஆனால் அவள் தன் உதிரத்திலே உருவான குழந்தைக்கு வழி வகை தேட வேண்டுமே, அதனால் கையேந்திப் பிச்சை எடுக்கிறாள். போவோர் வருவோர் கண்ணிருந்தும் பார்வையற்றவராய்ப் பறக்கின்றனர்!

"அந்தப் பக்கமாக நான் வந்து கொண்டிருந்தேன். இந்த அவல நிலையைக் கண்டேன். கண் கலங்கினேன். கண்ணீரே கவிதையாக வந்தது" என்கிறார் திரு ம. ப. பெரியசாமி தூரன் அவர்கள்.

"கையிலோர் குழந்தை
கடனும் எவனோ
மையலே காட்டி
மயக்கிலே பசப்பிப்
பேயாம் காமம்
பெருந்தீச் சுட்டதால்
நாய்போல் உடலை
நச்சினன் தந்தது —
பாவச் சின்னமாய்ப்
பாவையின் இடுப்பிடை
கூவி இரைந்துக்
குவலயம் பழித்திட
நின்றதாம் எனினும்
நெஞ்சினில் எங்கோ
கன்றிய பரிவின்
கருக்கலுக் குள்ளே
மின்னிடும் தாய்மையின்
வேகத்தால் தாங்கினாள்"

மேலும் அந்தப் பிச்சைக்காரியைப் பற்றி எழுதும்போது, "ஊர்ந்திடும் வீதியில் ஒரு கண் இல்லையோ? மெச்சிடும் பண்பெல்லாம் வெறும் வெளிப் பூச்சோ? பச்






சையும் பரிவும் பறந்ததோ, வறண்டதோ?" என்று கேட்கிறார். அந்த நிலைமைதானே இன்று நிலவுகிறது!

'கண்டதையும் கேட்டதையும் கவிதையாய் வடிக்கும் கவிஞனுடைய விரல்கள் பட்டதும் சொற்கள் சுடர் விட்டு எரிகின்றன' என்றார் அறிஞர் ஜூபெர்ட். ஆம். அந்த அனுபவமொழி பொய்க்கவில்லை.

கவிஞர் ஒரு சாலையின் வழியே போய்க் கொண்டிருக்கிறார். ஒரு வளமான மரத்திலிருந்து சருகுகள் கீழே விழுந்திருக்கின்றன. அந்தச் சருகைக் கண்ட கவிஞர் மனத்தில் சமுதாயத்தின் நடப்பும் நிழலிடுகிறது. 'பசை இருந்தால் பத்துப் பேர் சுற்று



திரு பெரியசாமி தூரன்

கிறார்கள். அது வற்றி விட்டாலோ வந்த இடம் தெரியாமல் ஓடிவிடுகிறார்கள்' என்ற உண்மை அந்தச் சருகில் மறைந்திருக்கிறது. போவோர் வருவோர் காலில் மிதிபட்டுக் கிடக்கும் அந்தச் சருகைப் பற்றிச் சரம் சரமாகப் பாடுகிறார் திரு தூரன்:

"கண்ணெடுத்தும் பாராமல்
காலில் மிதித்தார்கள்
மண்ணிலே வீழ்ந்தவுடன்
மதிப்பெல்லாம் போனதுவோ?
பசையிருந்த போதெல்லாம்
பத்துப்பேர் சுகம்காணத்
திசைவிரிந்த மரக்கிளையைச்
சீருடனே அணிசெய்தாய்,
காற்றுன்றன் செவிவழியே
கனிந்தன்று பாடிவரும்;
வேற்றூர்ப் பறவைவந்து
மிகப்பேசி நிழலொதுங்கும்;
வாடிநைந்தே உடல்சுருங்கி
வறண்டுவிட்டாய் என்றவுடன்
ஓடிவந்து காற்றதுவும்
ஒருகணமும் எண்ணாமல்
குப்புறவே பிடித்துந்திக்
கூசாமல் சீறியிங்குக்
குப்பையிலே சாக்கடையில்
கொண்டுதள்ளி விட்டதுவே!"

என்று சருகின் சரிதையைப் படம் பிடித்துக் காட்டும் கவிஞர், 'இத்தகைய காற்றைக் கடவுள் என்று சொல்லலாமா?' என்று கேள்வி கேட்டு அதற்குப் பதில் சொல்கிறார்:

'காற்றையுமோர் தேவனெனக்
கருதுவதும் சரியாமோ?
சீற்றமதன் பேரெதற்கு?
தினமும்இந்தப் பாரினிலே
பண்புச் சிகரமெனப்
பசப்புகின்ற மாந்தரிடம்
கண்ட திதுதானே?
கைவறண்டால் மதிப்பவர்யார்?'

பேட்டி : பி.வி. ஜி

.... மதிப்பெல்லாம் போனதுவோ ?"

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி



## அத்தியாயம் முப்பது

## தெய்வம் ஆயினாள்!

**பூ**ங்குழலி எவ்வளவு விரைவாக ஓடக் கூடியவளானாலும், மேலிருந்து எறியப்பட்ட வேலுடன் போட்டியிட முடியாதல்லவா? அவள் மந்தாகினி அத்தையின் அருகில் பாய்ந்து செல்வதற்குள் வேல் அத்தையின் விலாவில் பாய்ந்து விட்டது.

'வீல்' என்று மற்றொரு முறை பயங்கரமாக ஓலமிட்டு விட்டு மந்தாகினி கீழே விழுந்தாள்.

அதே சமயத்தில் அந்த அறையிலிருந்த அத்தனை பேருடைய குரல்களிலிருந்தும் பரிதாப ஒலிகள் கிளம்பின.

பூங்குழலியைப் போலவே மற்றவர்களும் தரையில் விழுந்த மாதரசியை நோக்கி ஓடி வர ஆயத்தமானார்கள்.

அச்சமயம் மேல் மாடத்திலிருந்து தடதடவென்று சத்தம் கேட்டது. சில மண்பாண்டங்கள் கீழ் நோக்கிப் பல திசைகளிலும் எறியப்பட்டன.

அவற்றில் ஒன்று சக்கரவர்த்தியின் அருகில் சுடர்விட்டுப் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்த தீபத்தின் பேரில் விழுந்தது. தீபம் அணைந்தது. அறையில் உடனே இருள் சூழ்ந்தது.

பிறகு சிறிது நேரம் அந்த அந்தப்புர அறையிலும் அதைச் சுற்றியுள்ள நீண்ட தாழ்வாரங்களிலும் ஒரே குழப்பமாயிருந்தது.

திடுதிடுவென்று மனிதர்கள் அங்குமிங்கும் வேகமாக ஓடும் காலடிச் சத்தங்கள் கேட்டன.

''விளக்கு! விளக்கு!'' என்று சின்னப் பழுவேட்டரையரின் கர்ஜனைக் குரல் அலறியது.

''ஆகா! ஐயோ!'' என்று ஒரு பெண் குரல் அலறும் சத்தம் கேட்டது. அது மகாராணியின் குரல் போலிருக்கவே, எல்லாருடைய நெஞ்சங்களும் திடுக்கிட்டு, உடல்கள் பதறின.

இத்தனை குழப்பத்துக்கிடையே பூங்குழலி அவளுடைய அத்தை மந்தாகினி விழுந்த இடத்தைக் குறி வைத்து ஓடி அடைந்தாள். அத்தையை அவளுக்கு முன் யாரோ தூக்கி மடியின் மேல் போட்டுக் கொண்டிருப்பதை உணர்ந்தாள்.

இதயத்தைப் பிளக்கும்படியான சோகத் தொனியில் விம்மும் குரலும் அழுகைக் குரலும் சேர்ந்து அவள் காதில் விழுந்தன.

வாசற்படிக்கருகில் ''யாரடா அவன்? ஓடாதே!

நில்!'' என்று சின்னப் பழுவேட்டரையர் கூச்சலிட்டார்.

ஓடியவன் யாராயிருக்குமென்று பூங்குழலி ஊகித்துக் கொண்டாள்.

அச்சமயம் இரண்டு தாதிப் பெண்கள் தீபங்களுடன் வந்து அந்த அறையில் பிரவேசித்தார்கள்.

தீப வெளிச்சத்தில் தோன்றிய காட்சி யாருமே எதிர்பார்க்க முடியாத அதிசயக் காட்சியாயிருந்தது.

மூன்று வருஷங்களாகக் காலை ஊன்றி நடந்தறியாமல் இருந்த சக்கரவர்த்தி,—கால்களின் சக்தியை அடியோடு இழந்துவிட்டிருந்த சுந்தர சோழ மன்னர்,—தாம் படுத்திருந்த கட்டிலிலிருந்து இறங்கி நடந்து வந்து, மந்தாகினியின் அருகில் உட்கார்ந்திருந்தார். அவர் அருகில் இளவரசரும் இருந்தார்.

மந்தாகினியின் விலாவில் ஒரு பக்கத்தில் பாய்ந்து இன்னொரு பக்கம் வெளிவந்திருந்த வேலின் முனையிலிருந்து இரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

சக்கரவர்த்தி படுத்திருந்த கட்டிலின் அருகில் மலையமான் மகள் வானமாதேவி காணப்பட்டாள்.

அவளுக்கு அருகில் சக்கரவர்த்தி தலை வைத்துச் சாய்ந்திருந்த தலையணையில் ஒரு கூரிய கத்தி செருகப்பட்டிருந்தது.



விளக்கு வந்ததும் மகாராணி கட்டிலை வெறிக்கப் பார்த்துவிட்டு, கரை காணாத அதிசயம் ததும்பிய கண்களினால் சக்கரவர்த்தி கீழே உட்கார்ந்திருந்ததைப் பார்த்தாள். அப்போது பொன்னியின் செல்வர் மந்தாகினியின் தலையை மெள்ளத் தூக்கிச் சக்கரவர்த்தியின் மடியில் வைத்தார்.

இளவரசர் அருள்மொழிவர்மரின் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்து கொண்டிருந்தது.

சக்கரவர்த்தியோ விம்மி விம்மி அழுது கொண்டிருந்தார்.

இவ்வளவையும் பூங்குழலி ஒரு கண நேரப் பார்வையில் பார்த்தாள். மறு கணத்திலேயே அங்கு நடந்த சம்பவங்களை யெல்லாம் ஒருவாறு ஊகித்துத் தெரிந்து கொண்டாள்.

மேலே யிருந்து வேலை எறிந்தவன் அதை ஊமை ராணி தடை செய்து விட்டதைக் கவனித்திருக்கிறான்.

உடனே மேலேயிருந்த தட்டுமுட்டுச் சாமான்களை எடுத்தெறிந்து விளக்கை அணைத்து விட்டிருக்கிறான்.

அப்போது ஏற்பட்ட இருட்டில் கீழே குதித்து இறங்கிக் கட்டிலில் சக்கரவர்த்தி படுத்திருப்பதாக எண்ணிக் கத்தியினால் குத்திவிட்டு ஓடியிருக்கிறான்.

சக்கரவர்த்திக்கு ஆபத்து என்று அறிந்து கட்டிலின் அருகில் ஓடிய மகாராணியைத் தள்ளி விட்டுப் போய் இருக்கிறான். அப்போதுதான் மகாராணி ''ஐயோ!'' என்று கதறியிருக்கிறாள்.

பின்னர் அச்சதிகாரன் வாசற்படியின் பக்கம் ஓடி அங்கே அச்சமயம் பிரவேசித்துக் கொண்டிருந்த சின்னப் பழுவேட்டரையரையும் தள்ளி விட்டு ஓடிப் போயிருக்க வேண்டும்.

இவ்வளவையும் பூங்குழலி ஊகித்துத் தெரிந்து கொண்டாள். இந்தப் பாதகச் செயலைச் செய்து தப்பி ஓடியவனைத் தொடர்ந்து போய்ப் பிடிக்க வேண்டும் என்ற எண்ணம் அவள் மனத்தில் ஒரு பக்கத்தில் உதயமாயிற்று. அதைக் காட்டிலும் தன் அத்தையின் இறுதி நெருங்கி விட்டது என்ற நினைவு அவள் உள்ளத்தில் பெருங் கொந்தளிப்பை உண்டாக்கியது. ஆகையால் மந்தாகினி சக்கரவர்த்தியின் மடியில் தலை வைத்துப் படுத்திருப்பதையும் பொருட்படுத்தாமல் அவள் அருகில் சென்று மண்டியிட்டு உட்கார்ந்து, ''அத்தை! அத்தை!'' என்று கதறினாள்.

''ஐயோ! நீ சொன்னது உண்மையாகிவிட்டதே! பாவி நான் உன்னைத் தனியாக விட்டு விட்டுப் போனேனே?'' என்று அழுது புலம்பினாள்.

ஆனால் மந்தாகினியோ அவள் இருந்த பக்கம் திரும்பிப் பார்க்கவே இல்லை. அவளுடைய கண்கள் சக்கரவர்த்தியின் திருமுகத்தை ஆவலுடன் அண்ணாந்து பார்த்தவண்ணம் இருந்தன.

ஏன்? அவளுடைய ஒரு கரத்தைப் பிடித்துக் கொண்டு கண்ணீர் உகுத்த இளவரசர் மீது கூட அவளுடைய கவனம் செல்ல வில்லை. பூங்குழலியைக் கவனிப்பது எப்படி ?

பூங்குழலி மேலும் புலம்பத் தொடங்கிய போது இளவரசர் தமது விம்மலை அடக்கிக் கொண்டு, ''சமுத்திர குமாரி! இது என்ன? உன்னை நீ மறந்துவிட்டாயா? நீ இருக்குமிடத்தை மறந்து விட்டாயா ?'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தார்.

பூங்குழலியும் சிறிது வெட்கமடைந்தவளாய்த் துயரத்தை அடக்கிக்கொண்டு எழுந்து நின்றாள்.

''அரசே! எனக்கு என் அத்தையைத் தவிர இவ்வுலகில் யாரும் கதி இல்லை!'' என்று விம்மினாள்.

இளவரசர் தமது கண்களில் பொங்கி வந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டே, ''பூங்குழலி! அவள் உனக்கு அத்தை! ஆனால் எனக்கு, என் பெற்ற தாயைக் காட்டிலும் பதின்மடங்கு மேலான தாய்! என்னை அழைத்து வரச் சொல்லி உன்னை அனுப்பி வைத்தாள்! ஆயினும் என் முகத்தை அவள் ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை. இதன் காரணத்தை அறிந்தாயா? முப்பது வருஷங்களுக்கு முன்னால் பிரிந்த என் தந்தையும் தாயும் இன்று சேர்ந்திருக்கிறார்கள். அவர்களுக்கு மத்தியில் தடையாக நிற்பதற்கு நாம் யார்?...'' என்று கூறிவிட்டு, மகாராணி உள்பட எல்லாரையும் ஒரு தடவை இளவரசர் கூர்ந்து பார்த்தார்.

மீண்டும் பூங்குழலியை நோக்கி, ''பெண்ணே! முன்னேயும் சில முறை எனக்கு நீ உதவி செய்திருக்கிறாய்! அந்த உதவியெல்லாம் அவ்வளவு முக்கியமானவையல்ல. இன்றைக்கு, என் தாயும் தந்தையும் ஒன்று சேரும் காட்சியைப் பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்கும்படி செய்தாய்! இதை நான் என்றும் மறக்க மாட்டேன்! சமுத்திரகுமாரி! உன் அத்தை இன்று எவ்வளவு மகத்தான புண்ணியத்தைக் கட்டிக் கொண்டாள் என்பதை எண்ணிப் பார்! சதிகாரனுடைய கொலை வேல் என் தந்தையின் மேல் படாமல் காப்பாற்றினாள்! அந்த வேலைத் தன் உடம்பில் பாயும்படி செய்து கொண்டாள்! தன் உயிரைக் கொடுத்துச் சக்கரவர்த்தியின் உயிரைக்

காப்பாற்றினாள்! ஒரு முறையல்ல; இரு முறை அவரைக் காப்பாற்றினாள்! உன் அத்தையின் மீது வேல் பாய்ந்ததைக் கண்டதும் மூன்று வருஷங்களாகச் சக்தி யிழந்திருந்த என் தந்தையின் கால்களில் மீண்டும் சக்தி வந்தது. அவர் கட்டிலி லிருந்து எழுந்து ஓடி வந்தார். அதனால் மறுபடியும் அவர் உயிர் தப்பியது! சதி காரன் அவனுடைய குறி தப்பிவிட்ட தாக எண்ணி விளக்கை அணைத்துவிட் டுக் கீழே குதித்து வந்து மீண்டும் அவ னுடைய பாதகத் தொழிலைச் செய்யப் பார்த்தான். ஆனால் சக்கரவர்த்தி எழுந்து வந்து விட்டதால் அவனுடைய நோக்கம் நிறைவேறவில்லை. அதோ என்னைப் பெற்ற தாய், மலையமான் குமாரி, கரை காணா வியப்புடன் நிற் பதைப் பார்! உன் அத்தையின் மீது வேல் பாய்ந்ததை என்னைப் பெற்ற தாய் பார்த்தாள். மறுபடியும் அந்தக் கொலைகாரன் தன் சதித் தொழிலைச் செய்யலாம் என்று எண்ணி ஓடி வந் தாள். அத்தை செய்த உயிர்த் தியா கத்தைத் தானும் செய்ய வேண்டும் என்று எண்ணினாள். என் தந்தையைத் தன் உடலினால் மறைத்து, அவர் மீது விழும் அடுத்த ஆயுதத்தைத் தான் தாங்கிக் கொள்ள வேண்டும் என்று நினைத்தாள். கட்டிலில் என் தந்தையைக் காணாதிருக்கவேதான் 'ஐயோ!' என்று அலறினாள். சக்கரவர்த்தி அங்கேயே இருந்திருந்தால், என் தந்தை, தாய் இருவரில் ஒருவர் இன்று இறந்திருப் பார்கள். சமுத்திர குமாரி! உன் அத்தை இந்தச் சோழ குலத்துக்கும் சோழ நாட் டுக்கும் எவ்வளவு பெரிய சேவை செய் திருக்கிறாள் என்பதை இப்போது உணர்ந்தாயா? சதிகாரனுடைய ஆயு தத்தினால் சக்கரவர்த்தி மாண்டிருந்தால், சோழ ராஜ்யம் சின்னாபின்னப்பட்டுப் போய்விடும். பழுவேட்டரையர் குலத் துக்கு என்றென்றும் மாறாத பழிச்சொல் ஏற்படும். என் தந்தையின் உயிரையும், தாயின் உயிரையும் மட்டும் உன் அத்தை காப்பாற்றவில்லை. பழுவேட்டரையரின் குலப் பெயரையும் காப்பாற்றினாள். சோழ நாட்டுக்கே பெரும் விபத்து நேராமல் காப்பாற்றினாள். சோழ வம் சத்துக்கே குலதெய்வம் ஆனாள். பூங் குழலி! உன் அத்தைக்காக இனி நான் ஒரு சொட்டுக் கண்ணீர்கூட விடப் போவதில்லை. அவளுக்காக நீயும் அழ வேண்டியதில்லை. வேறு யாரும் துக்கப் படவேண்டியதில்லை! இத்தகைய தெய்வ மரணம் யாருக்குக் கிடைக்கும்? முப் பது வருஷங்களாகப் பிரிந்திருந்த பதிக் காக உயிரைக் கொடுக்கும் பாக்கியம் யாருக்குக் கிடைக்கும்? அவருடைய மடி யிலே தலையை வைத்துக் கொண்டு நிம் மதியாக உயிரைவிடும் பேறு யாருக்குக் கிடைக்கும்?'' என்று கூறிவிட்டு, இள வரசர் மீண்டும் ஒருமுறை சுற்றுமுற்றும் பார்த்தார்.

அந்த அறையிலும் வாசற்படி அரு கிலும் நின்றவர்கள் அனைவரும் தம் முடைய வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள் என்பதைப் பார்த் துக்கொண்டார். மேலும் கூறினார்:

''பூங்குழலி! உன் அத்தை இறந்து விட்டால் நீ அனாதையாகி விடுவாய் என்று அஞ்ச வேண்டாம். நீ இன்று செய்த உதவியை நான் என்றும் மறக்க மாட்டேன். உன்னிடம் என்றென்றும் நன்றியுள்ளவனா யிருப்பேன். நான் ஒருவேளை மறந்து விட்டாலும், சின்னப் பழுவேட்டரையர் மறக்க மாட்டார். உன் அத்தையும் நீயும் இன்று அவருக்கு எத்தகைய உதவி செய்தீர்கள்? சக்கர வர்த்தியின் மீது வேலோ, கத்தியோ பாய்ந்திருந்தால் உலகம் என்ன சொல்லி யிருக்கும்? தஞ்சைக் கோட் டைத் தளபதியான பழுவேட்டரை யரும் அந்தப் பாதகச் செயலுக்கு உடந்தை என்றுதான் ஊரார், உலகத் தார் சொல்லுவார்கள். கோட்டை வாசலில் கொடும்பாளூர் வேளார் வேறு காத்திருக்கிறார். பழுவூர்க் குலத்தை அடியோடு ஒழித்துக் கட்டுவதற்கு அவ ருக்கு வேண்டிய காரணம் கிடைத்திருக் கும். அவ்வளவு ஏன்? இன்றைக்கு நான் உன் உதவியினால் கோட்டைக்குள் வரா திருந்திருந்தால், கோட்டைத் தளபதி யின்மேல் எனக்குக் கூடத்தான் சந்தேகம் உதித்திருக்கும். ஆகையால் சின்னப் பழுவேட்டரையர் மற்ற எல்லாரையும் விட உன்னிடம் அதிக நன்றி செலுத்த வேண்டும். அவரிடம் நீ என்ன பரிசு கேட்டாலும் கொடுப்பார். அவருடைய சொத்திலே பாதியைக் கேட்டாலும் கொடுத்து விடுவார்!''

இவ்வாறு இளவரசர் கூறியபோது சின்னப் பழுவேட்டரையரைப் பார்த் துக் கொண்டிருந்தார். அவருடைய கட மையை அவர் சரியாக நிறைவேற்ற வில்லை என்பதை அவருக்கு ஒருவாறு உணர்த்த விரும்பியே மேற்கண்டவாறு பேசினார். அதைச் சின்னப் பழுவேட் டரையர் அறிந்துகொண்டார் என்பதை அவருடைய முகத்தில் தோன்றிய வேதனை நன்கு எடுத்துக் காட்டியது. அவருடைய முகத்தில் சாதாரணமாகக் குடிகொண்டிருந்த கம்பீரத் தோற்றம் போய்விட்டது. யாரையும் இலட்சியம் செய்யாத, எதற்கும் அஞ்சாத, வீரப்

பெருமிதத்தின் அறிகுறி இப்போது அந்த முகத்தில் இல்லவே இல்லை.

போர்க்களத்திலிருந்து புறமுதுகிட்டு ஓடிவந்த வீரன் ஒருவன், பலர் ஏகம்படியாக இந்த உயிரைக் காப்பாற்றிக் கொண்டு வந்ததில் என்ன பயன் என்று வெட்கி மாழ்கும் பாவனை அவருடைய முகத்தில் இப்போது காணப்பட்டது.

இளவரசர் முதலில் கூறியதையெல்லாம் கேட்டு உள்ளமும் உடலும் உருகி நெகிழ்ந்து கொண்டிருந்த பூங்குழலி அவர் பரிசைப் பற்றிச் சொன்னதும் பழைய ஆக்ரோஷம் கொண்ட சமுத்திர குமாரியாகி விட்டாள்.

''இளவரசே! எனக்கு யாருடைய நன்றியும் தேவையில்லை; பரிசும் வேண்டியதில்லை. எனக்குத் தஞ்சம் அளிக்கச் சமுத்திர ராஜா இருக்கிறார். என் படகும் கால்வாய் முனையில் பத்திரமாக இருக்கிறது. இதோ நான் புறப்படுகிறேன். ஒருவேளை என் அத்தை உயிர் பிழைத்தால்?... இல்லை, அது வீண் ஆசை! காலையிலேயே என் அத்தை சொல்லி விட்டாள். வரப் போவதை உணர்ந்துதான் சொன்னாள். இனி அவள் பிழைக்கப் போவதில்லை. எனக்கு இங்கே வேலையும் இல்லை. என்றாவது ஒரு நாள் தாங்களும் கொடும்பாளூர் இளவரசியும் கோடிக்கரைக்கு வந்தால்...'' என்று கூறிப் பூங்குழலி வானதி இருந்த இடத்தை நோக்கினாள். அந்தப் பெண் அகல விரித்த கண்களினால் தன்னையும் இளவரசரையும் பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்தாள். ''சீச்சீ! இது என்ன ஆசை? நான் போகிறேன்'' என்று கூறிவிட்டு வாசற்படியை நோக்கி விரைந்து நடந்தாள்.

இதுவரையில் திக்பிரமை கொண்டவளைப் போல நின்றிருந்த வானதிக்கு அப்போதுதான் சிறிது தன்னுணர்ச்சி வந்தது. அவள் பூங்குழலியின் அருகில் வந்து, ''என் அருமைத் தோழி! நீ எங்கே போகிறாய்? நானும் உன்னைப் போல் அநாதைதான்!....'' என்று மேலும் பேசுவதற்குள், பூங்குழலி குறுக்கிட்டாள். ''தேவி! நான் தங்கள் அருமைத் தோழியுமல்ல; தாங்கள் என்னைப் போல் அநாதையும் அல்ல. சீக்கிரத்தில் பழையாறை இளைய பிராட்டி வந்து விடுவார்!'' என்றாள்.

வானதிக்கு அப்போதுதான் உண்மையில் இளையபிராட்டியின் நினைவு வந்தது. ''ஐயோ! அக்காவுக்கு இங்கு நடந்ததெல்லாம் ஒன்றும் தெரியாதே! செய்தி சொல்லி அனுப்பவேண்டுமே?'' என்றாள்.

''அதற்கும் ஒரு கவலையா? கோட்டை வாசலில் தங்கள் பெரிய தகப்பனார் இருக்கிறாரே! அவரிடம் சொன்னால் செய்தி அனுப்புகிறார்!'' என்று கூறிவிட்டுப் பூங்குழலி வழிமறிப்பவள் போல் நின்ற வானதியைக் கையினால் சிறிது நகர்த்தி விட்டு மேலே சென்றாள்.

வாசற்படிக்கு அருகில் சின்னப் பழுவேட்டரையர் மறுபடியும் அவளை வழிமறித்து நிறுத்தினார்.

''பெண்ணே! பொன்னியின் செல்வர் கூறியதையெல்லாம் நான் கேட்டுக் கொண்டிருந்தேன். அவர் கூறியது முற்றும் உண்மை. பழுவூர்க் குலத்துக்கு அழியாத அபகீர்த்தி உண்டாகாமல் நீ காப்பாற்றினாய். உனக்கு நான் அளவிலாத நன்றிக் கடன் பட்டிருக்கிறேன். நீ என்ன பரிசு வேண்டுமென்று கேட்டாலும் தருகிறேன்'' என்றார்.

பூங்குழலி துயரப் புன்னகையுடன், ''தளபதி! இங்குள்ளவர்களில் சிலருக்குச் சக்கரவர்த்தி உயிர் பிழைத்ததில் சந்தோஷம். சிலருக்கு அவர் நடமாடும் சக்தி பெற்றதில் சந்தோஷம். இன்னும் சிலருக்குப் பழுவேட்டரையர் குலம் அபகீர்த்திக்கு உள்ளாகாததில் மகிழ்ச்சி. என் அத்தைக்கு நேர்ந்த துர்மரணத்தைப் பற்றி யாருக்கும் கவலை இருப்பதாகத் தெரியவில்லை. நானாவது அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாமா? என் அத்தையைக் கொன்றவன் எங்கே போனான் என்று தேடிக் கண்டுபிடிக்கப் பார்க்கிறேன். தயவுசெய்து எனக்கு வழியை விடுங்கள்!'' என்றாள்.

பூங்குழலியின் இந்த வார்த்தைகள் கோட்டைத் தளபதி காலாந்தக கண்டரைத் தூக்கி வாரிப்போட்டன.

''பெண்ணே! உன்னிடம் நான் தோற்றேன். கொலைகாரனை விட்டு விட்டுச் சும்மா நின்று கொண்டிருக்கிறேன். அவனைக் கண்டு பிடிக்கா விட்டால், சக்கரவர்த்தி பிழைத்ததினால் மட்டும் என் பழி தீர்ந்து விடாது. உன் வார்த்தைகளில் நான் அவநம்பிக்கை கொண்டது தவறு! கொலைகாரன் எங்கே போயிருப்பான்? என்னைத் தள்ளி விட்டு ஓடினான். ஆம்! ஆம்! சுரங்க வழிக்குத்தான் போயிருப்பான். வா! எனக்கு உதவியாக வா! வேறு யாரையும் அழைத்துப் போக விருப்பம் இல்லை! அவன் மட்டும் என்னிடம் அகப்படட்டும்! என்ன செய்கிறேன், பார்!''

இவ்விதம் சொல்லிக் கொண்டே சின்னப் பழுவேட்டரையர் தம் இரும்புக் கையினால் பூங்குழலியையும் பிடித்து இழுத்துக் கொண்டு சிற்ப மண்டபத்தை நோக்கி விரைந்து சென்றார்.

அந்த அறையில் இருந்த மற்ற எல்லோரும் அப்படி அப்படியே நின்றார்கள். இளவரசர் விருப்பத்தை அறிந்து கொண்டு சக்கரவர்த்தியின் அருகில் போகாமல் தூரத்தில் ஒதுங்கி நின்றார்கள். எல்லாருடைய கண்கள் மட்டும் சக்கரவர்த்தியின் பேரிலும், அவர் மடியில் தலை வைத்துப் படுத்திருந்த மாதரசியின் பேரிலும் இருந்தன.

ஆனால் சுந்தர சோழரும் மந்தாகினியுமோ ஒருவரோடொருவர் பரிபூரணமாய்க் கலந்து போயிருந்தார்கள். மற்றவர்களைப் பற்றிய எண்ணமே அவர்களுடைய நெஞ்சில் புகுவதற்கு இடமிருக்கவில்லை. முப்பது வருஷத்து வாழ்க்கையைச் சில நிமிஷ நேரத்தில் நடத்த முடியுமா என்பது பற்றி மனோதத்துவ விற்பன்னர்கள் பொது முறையில் என்ன சொல்லுவார்களோ, தெரியாது. ஆனால் சுந்தர சோழரும் மந்தாகினியும் அந்தச் சில நிமிஷ நேரத்தில் பன்னெடுங்கால வாழ்க்கையை நடத்தினார்கள் என்பதில் சந்தேகம் சிறிதுமில்லை. முப்பது வருஷங்களில் ஒருவரோடொருவர் பேசக் கூடியதையெல்லாம் அவர்கள் பேசிக்கொண்டார்கள். மந்தாகினி தனக்குரிய நயன பாஷை மூலமாகவே பேசினாள். சுந்தர சோழர் பெரும்பாலும் அந்தப் பாஷையை அறிந்து கொண்டார். இளம் பிராயத்தில் பூதத் தீவிலே அவர் சில மாத காலம் மந்தாகினியுடன் சொர்க்க வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்த காலத்தில் அவளுடைய சமிக்ஞை பாஷையையும் நன்கு தெரிந்து கொண்டிருந்தார். அவற்றை அவர் இன்றளவும் மறந்துவிடவில்லை. ஆகையால் மந்தாகினி இப்போது கண்களால் மட்டுமே பேசிய போதிலும் அவருடைய உள்ளம் அவள் மனத்தில் உதித்த எண்ணங்களை அக்கணமே தெரிந்து கொண்டது. அப்படி அதிகமாக மந்தாகினி விஷயம் எதுவும் சொல்லிவிடவும் இல்லை.

''தங்கள் பேரில் எனக்கு ஒரு வருத்தமும் இல்லை. உலகையாளும் சக்கரவர்த்தியாகிய தாங்கள் எங்கே? கரையர் மகளும் ஊமையும் செவிடுமான நான் எங்கே? தங்கள் முன் வராமல் நான்தான் இத்தனை காலமும் மறைந்து திரிந்து கொண்டிருந்தேன். அவ்வப்போது தூரத்தில் நின்று தரிசித்து மனத்தைத் திருப்தி செய்து கொண்டிருந்தேன். உயிரை விடும் தருணத்தில் தங்கள் மடியில் படுத்து உயிரை விடும் பாக்கியம் எனக்குக் கிடைத்ததே? இதைக் காட்டிலும் எனக்கு வேறு என்ன வேண்டும்?'' — இவ்வளவுதான் மந்தாகினி கூறியது. இதையே திருப்பித் திருப்பி அவளுடைய உள்ளமும் கண்களும் சொல்லிக் கொண்டிருந்தன. அவளுடைய முகத்திலோ எல்லையற்ற ஆனந்தம் ததும்பிக் கொண்டிருந்தது. விலாப்புறத்தில் வேல் குத்தி வெளிவிலும் வந்திருந்தபடியால் அவள் சிறிதும் வேதனைப்பட்டதாக அவள் முகக் குறியிலிருந்து தெரியவில்லை. அவள் அடியோடு தன் தேகத்தைப் பற்றிய நினைவை இழந்து விட்டிருந்ததாகக் காணப்பட்டாள். பறவை கூண்டிலிருந்து கிளம்பும் தருணம் நெருங்கி விட்டது. இனி, கூண்டைப் பற்றி அந்தப் பறவைக்கு என்ன கவலை இருக்கப் போகிறது?

சுந்தரசோழரும் தமது உடம்பைப் பற்றிய நினைவை மறந்துவிட்டிருந்தார். அதனால்தானே அவர் தமது கால்கள் பலவீனமடைந்திருந்ததைக் கூட மறந்து கட்டிலிலிருந்து இறங்கி மந்தாகினியிடம் ஓடிவர முடிந்தது!

ஆனால் சுந்தரசோழர் மந்தாகினியைப்போல் சில வார்த்தைகள் சொல்வதோடு திருப்தி அடையவில்லை. எத்தனை எத்தனையோ விஷயங்களை அவர் சொல்லிக் கொண்டேயிருந்தார். அவருடைய கண்கள் சொல்லிய விஷயங்களை அவருடைய உதடுகள் வார்த்தைகளாக முணுமுணுத்துக் கொண்டேயிருந்தன. அந்த அறையிலிருந்த மற்றவர்களுக்கு அவர் பேசிய வார்த்தை ஒன்றுகூடப் புரியவில்லை. ஆனால் மந்தாகினிக்கு எல்லாம் விளங்கிக் கொண்டு வந்தது. ஆமோதிக்க வேண்டிய இடத்தில் ஆமோதித்தாள்; மறுக்க வேண்டிய இடத்தில் தலையை ஆட்டி மறுத்தாள். ஆனந்தமடைய வேண்டிய இடத்தில் ஆனந்தப்பட்டாள்; ஆறுதல் கூற வேண்டிய இடத்தில் ஆறுதலும் தெரிவித்தாள்.

''என் உயிருக்கு உயிரானவளே! நீ இன்று எனக்காக உன் உயிரை விடுகிறாய்! என் உயிர் மட்டும் எத்தனை நாள் இருக்கும் என்று எண்ணுகிறாய்? நான் கல்நெஞ்சமுள்ள பாவிதான்; ஒத்துக் கொள்கிறேன். இராஜ்யம் ஆளும் விதிக்குப் பிறந்தவர்கள் இவ்விதம் நெஞ்சைக் கல்லாகச் செய்து கொள்ளவேண்டியிருக்கிறது. இல்லாவிடில் இராஜ்ய நிர்வாகம் எப்படி நடக்கும்? பூதத் தீவில் நான் உன்னை விட்டு விட்டு வந்தது முதலில் நான் செய்த பெருங் குற்றம். அதன் விளைவாக இன்னும் பல குற்றங்களைச் செய்ய வேண்டியதாயிற்று. அந்தச் சொர்க்கத்துக்கு இணையான தீவில் நாம் எவ்வளவு ஆனந்தமாக வாழ்ந்தோம்? அது நீடித்திருக்கக் கொடுத்து வைக்கவில்லையே?

கடவுளே சதி செய்து விட்டாரே! என்னைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் சதி செய்து விட்டார்களே? யுவராஜ்ய பட்டாபிஷேகம் ஆனதும் உன்னைத் தேடி வரவேண்டுமென்றிருந்தேன். உன்னைத் தேடிக் கோடிக்கரை வரையில் ஓடிவந்தேன். பாவிகள் நீ கடலில் குதித்துச் செத்து விட்டாய் என்று சொன்னார்கள். என் பிராண சிநேகிதன் என்று எண்ணியிருந்த அநிருத்தனே ஏமாற்றி விட்டான்...ஆமாம், ஆமாம்! நீ சொல்வது தெரிகிறது. நீ கடலில் குதித்தது உண்மைதான் என்றும் பிறகு யாரோ உன்னைக் காப்பாற்றியதாகவும் சொல்லுகிறாய். ஆனால் இது அநிருத்தனுக்குத் தெரிந்திருந்தும் அவன் சொல்லவில்லை. அதனால் வந்த விபரீதத்தைப் பார்! உன்னைப் பார்க்க நேர்ந்தபோதெல்லாம் உன் ஆவியைப் பார்ப்பதாக எண்ணிக் கொண்டேன். என்னைப் பழி வாங்குவதற்காக வந்து சுற்றுகிறாய் என்று நினைத்துக் கொண்டேன். என் அருமைக் குமாரனை நீ காவேரி வெள்ளத்திலிருந்து எடுத்துக் காப்பாற்றியிருக்க, நீதான் அவனைக் காவேரியில் தள்ளிவிட்டாய் என்று எண்ணிக் கொண்டேன். ஆகா! நீ மட்டும் உயிரோடிருக்கிறாய் என்று அறிந்திருந்தால், என் வாழ்க்கை எப்படியெல்லாம் இருந்திருக்கும்? இந்தப் பெரிய சாம்ராஜ்யத்துக்காக உன்னை நான் கைவிட்டிருப்பேன் என்று நினைக்கிறாயா? ஒருநாளும் இல்லை!....''

இவ்விதம் சுந்தரசோழர் தம் உள்ளத்தில் பொங்கித் ததும்பிய எண்ணங்களையெல்லாம் வாய் வார்த்தைகளினால் முணுமுணுத்துக் கொண்டே வந்தார். கடைசியாக அவர் கூறினார்:

''இரண்டு நாளைக்குமுன் நீ என் முன் வந்த போது உன் மேல் விளக்கை விட்டெறிந்தேன். உன்னை மறுபடியும் பார்த்தபோதெல்லாம் அருவருப்புக் காட்டினேன். அதற்காகவெல்லாம் நீ என்னை மன்னிக்க வேண்டும். பல வருஷ காலமாக நீ ஆவியாக வந்து என்னைத் துன்புறுத்துகிறாய் என்ற எண்ணத்தில் இருந்தேன். நள்ளிரவில் நீ இதே அறையில் என் முன் தோன்றி ஏதேதோ கூறினாய். என் மக்களை நீ சபிக்கிறாய் என்று எண்ணிக் கொண்டேன். அப்போது ஏற்பட்ட வெறுப்பு உன்னை நேரில் பார்த்த போதும் தீரவில்லை. உண்மையில், நீ எங்கள் குலதெய்வமாக வந்தாய்! எனக்கும் என் மக்களுக்கும் தீங்கு நேராமல் தடுப்பதற்காக வந்தாய்! அதையெல்லாம் நான் தெரிந்து கொள்ளவில்லை. என் மகள் குந்தவை எடுத்துக் கூறிய பிறகுதான் தெரிந்தது. ஐயோ! எப்பேர்ப்பட்ட தவறு செய்தேன்! அதற்காகவெல்லாம் என்னை மன்னித்துவிடு! உன்னிடம் எனக்குள்ள அன்பை இனி எப்படிக் காட்டுவேன்? அதற்கு வழியில்லாமல் செய்து விட்டாயே! என் குமாரர்களுக்குப் பட்டம் கட்ட வேண்டாமென்று சொன்னாயே, அதன் நியாயம் எனக்கே தெரிந்திருக்கிறது. ஏன் தலையை அசைக்கிறாய்? என் நன்மைக்காகவும் என் குலத்தின் நன்மைக்காகவுமே சொன்னாய்! அதில் தவறு ஒன்றுமில்லை. ஆனால் இங்குள்ளவர்கள் ஏதேதோ சொல்லி என்னைப் பைத்தியமாக அடிக்கப் பார்க்கிறார்கள். உனக்குக் குழந்தை பிறந்ததாகச் சொல்கிறார்கள். அது உண்மையானால் சொல்லி விடு! உன் மகன் இருந்தால், சொல்லி விடு! அவனுக்கு என்னால் இயன்றதைச் செய்து உனக்குச் செய்த துரோகத்துக்குப் பரிகாரம் தேடுகிறேன்....''

இவ்விதம் சுந்தரசோழர் கூறியபோது மந்தாகினி பரக்கப் பரக்க அவரைப் பார்த்து விட்டுப் பிறகு சுற்று முற்றும் பார்த்தாள். வாசற்படியின் அருகில் நின்ற பொன்னியின் செல்வர் மீது அவளுடைய பார்வை தங்கி நின்றது.

உடனே இளவரசர் தந்தையும் தாயும் இருந்த இடத்தை நெருங்கி வந்தார். தாயின் அருகில் உட்கார்ந்தார்.

மந்தாகினி இளவரசரைத் தன் கையினால் தொட்டுக் கொண்டு சக்கரவர்த்தியின் திருமுகத்தைப் பார்த்தாள். ''இவன்தான் என் புதல்வன்!'' என்னும் பொருள் அந்தப் பார்வையிலிருந்து மிகத் தெளிவாக வெளியாயிற்று.

இவ்வாறு இரண்டு மூன்று தடவை மந்தாகினி சக்கரவர்த்தியையும் பொன்னியின் செல்வரையும் மாறி மாறிப் பார்த்தாள். பின்னர் கண்களை மூடிக் கொண்டாள். சிறிது நிமிர்ந்திருந்த அவளுடைய தலை, — சக்கரவர்த்தியின் மடியில், — நன்றாகச் சாய்ந்தது.

மந்தாகினியின் உயிர் அவளுடைய உடலை விட்டுப் பிரிந்தது.

சுந்தர சோழ சக்கரவர்த்தி விம்மி அழுததை இன்று வரை யாரும் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை.

இன்றைக்கு அவர் 'ஓ'வென்று கதறி அழுததைப் பார்த்தும் கேட்டும் எல்லாரும் திகைத்துப் போனார்கள்.

இளவரசர் அருள்மொழிவர்மர் மட்டுமே மனத் தெளிவுடன் இருந்தார்.

அவர் சக்கரவர்த்தியைப் பார்த்துக் கூறினார்: — ''தந்தையே! என் அன்னையின் மரணத்துக்காகத் தாங்கள் வருந்த வேண்டியதில்லை. அவர் மரணமடையவேயில்லை. தெய்வமாக அல்லவோ

மாறியிருக்கிறார்? என்றென்றைக்கும் நம் சோழ வம்சத்துக்கு அவர் குல தெய்வமாக விளங்கி வருவார்'' என்றார்.

ஆயினும், சுந்தர சோழர் விம்மி அழுவது நின்றபாடில்லை. மந்தாகினியின் மரணத்துக்காகத்தான் அவர் அழுதாரா? அல்லது அதே சமயத்தில் வெகு தூரத்தில் நடந்த இன்னொரு துயர சம்பவத்தின் அதிர்ச்சி அவர் உள்ளத்தில் தோன்றியதனால் அழுதாரா என்று யார் சொல்ல முடியும்?

* * *

இளவரசர் அருள்மொழி வர்மர் கூறிய தேறுதல் மொழிமட்டும் உண்மையாயிற்று. பொன்னியின் செல்வர் பிற்காலத்தில் இராஜராஜ சோழர் என்ற பெயருடன் சிங்காதனம் ஏறியபோது 'ஈழத்து ராணி' என்று அவர் அழைத்த மந்தாகினி தேவியின் ஆலயத்துக்காகத் தஞ்சையில் ஒரு கோயில் எடுப்பித்தார். அது சில காலம் 'சிங்கள நாச்சியார் கோயில்' என்ற பெயருடன் பிரபலமாக விளங்கி வந்தது. நாளடைவில் அதன் பெயர் திரிந்து 'சிங்காச்சியார் கோயில்' என்று ஆயிற்று. இன்றைக்கும் தஞ்சை நகரின் ஒரு பகுதியில் 'சிங்காச்சியார் கோயில்' என்ற பெயருடன் ஒரு சிறிய சிதிலமான கோயில் இருந்து வருவதைத் தஞ்சை செல்லுகிறவர்கள் விசாரித்துத் தெரிந்து கொள்ளலாம்.

(தொடரும்)




# சிறப்புச் சிறுகதைகள்

சாதாரண ஆண்டில் கல்கியில் இடம் பெற்ற சிறப்புச் சிறுகதைகளுள் சிறந்த ஒன்றினைத் தேர்ந்தெடுத்து அதற்கு விசேஷப் பரிசாக ரூ. 1000 தருவதென்றும் இந்தச் சிறுகதையைத் தேர்ந்தெடுப்பதில் வாசகர்களின் அபிப்பிராயங்களும் கோரப்படுமென்றும் அறிவித்திருந்தோம்.

சாதாரண ஆண்டில் கல்கியில் இடம் பெற்ற சிறப்புச் சிறுகதைகளாவன :

| கதையின் பெயர் | கதாசிரியர் | தேதி |
|---|---|---|
| (1) கனிமண் கால்கள் | ஜி.எஸ். பாலகிருஷ்ணன் | 3- 5-70 இதழ் |
| (2) பொய் மான் | வ.சா. நாகராஜன் | 12- 7-70 இதழ் |
| (3) கொடி மலர் | குணசீலன் | 23- 8-70 இதழ் |
| (4) உயிருக்குப் பின் உறவு | உமா குருமூர்த்தி | 6- 9-70 இதழ் |
| (5) முடிச்சுகள் | பொன்னித்துறைவன் | 18-10-70 இதழ் |
| (6) அதிர்ஷ்டம் | எஸ். கிருஷ்ணமூர்த்தி | 8-11-70 இதழ் |
| (7) இரண்டு காலைப் பொழுதுகள் | வாசவன் | 14- 2-71 இதழ் |
| (8) நப்பசலையின் காதல் | கோவி. மணிசேகரன் | 7- 3-71 இதழ் |

ஓர் அஞ்சல் அட்டையில் நீங்கள் தேர்ந்தெடுத்த கதையின் பெயரை எழுதி எந்தக் காரணத்தினால் அது சிறந்தது என்பதை ஏழெட்டு வரிகளுக்கு மேற்படாமல் எழுதி அனுப்புங்கள்.

உங்கள் முடிவு மே மீ 15ந் தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்க வேண்டும். அதற்குப் பிறகு வரும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டாது.

தகுந்த காரணங்களுடன் மிக அதிகமான வாசகர்களால் சிறந்தது எனத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைக்கு விசேஷப் பரிசான ரூ. 1000 வழங்கப்படும்.

சிறந்த விமர்சனங்கள் கல்கியில் பிரசுரமாவதுடன் பரிசும் பெறும்.



ரேடியோவின் சிறந்த கட்டங்களுக்கு

# எஸ்ட்ரெலாவின் சிறந்த ரேடியோ பேட்டரிகள்

காகித, பிளாஸ்டிக், உலோகக் கவச உறைகளிட்ட பேட்டரி வகைகள் உள்ளன, நீங்கள் தேர்ந்தெடுக்க. கசியாத் தன்மை உடையவை அவை. நெடுங்கால உழைப்பிலும் இடையறாத சக்தியை வழங்குபவை. உங்கள் டிரான்ஸிஸ்டர் ரேடியோவின் மூலம் உங்கள் செவியின்பத்தைப் பெருக்கத் தலைசிறந்த பேட்டரிகள் — எஸ்ட்ரெலா.

இலவசம்!

திரைப்படங்கள், இசை,

எஸ்ட்ரெலா
பேட்டரிகள்

அதிக சக்தி
அதிக உபயோகம்

எஸ்ட்ரெலா பேட்டரீஸ்
லிமிடெட்,
பம்பாய்-19.




## 74 - (1)

அரசியல் என்பது மக்களுடைய க்ஷேம நலத்தைப் பற்றிய விவகாரம். மக்களுடைய க்ஷேமநலத்துக்காகப் பணி செய்யும் தகுதி யார் உடையவர்கள்? தெய்வத்தை நாடும் மனிதர்களே அந்தப் பணியில் ஈடுபட வேண்டும். தெய்வ பக்தி இல்லாதவர்கள் அரசியல் முயற்சிகளில் சேராமலிருப்பதே நலம்.

உண்மை தெய்வபக்தி கொண்டவர்கள் மக்களுடைய க்ஷேமத்தைப் பற்றிக் கவலைப்பட்டே தீர வேண்டும். ஆனபடியால் அரசியலில் அவர்கள் சம்பந்தப்படாமல் இருக்க முடியாது. அரசியல் விவகாரங்களில் ஆண்டவனுடைய ஆட்சியை உணர்ந்து நிலைநாட்ட வேண்டும். தெய்வ பக்தியைப் புறக்கணித்த அரசியலானது அரக்கருக்குச் சமானமாகும். அதைத் தீண்டலாகாது. (யங் இந்தியா 18-6-25)

மக்களுடைய க்ஷேமத்தையும் நலனையும் கவனியாத ஒருவன் எப்படி சமய வாழ்க்கை நடத்த முடியும்? பக்தர்கள் அரசியலில் புகுவதில் வியப்பில்லை. வாழ்க்கை முழுவதும் ஒன்றே ஆகும். அதை இலாக்காக்களாகப் பிரித்து ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல், 'இது சமூகத் தொண்டு, இது பொருள் நிலைத் தொண்டு, இது அரசியல் தொண்டு, இது வேறொன்றிலும் சம்பந்தப்படாத சமயத் தொண்டு' என்று பிரிவினை செய்து வாழ்க்கை நடத்த இயலாது. வாழ்க்கைக்குச் சம்பந்தப்படாத தெய்வ பக்தி எனக்கு விளங்கவில்லை. நன்னெறியே எல்லா முயற்சிகளுக்கும் பணிகளுக்கும் ஆதாரம். சன்மார்க்கத்தோடு இணைக்கப்படாத பணிகள் வெற்று ஆர்ப்பாட்டமே. பொருளற்ற வீண் முயற்சிகள் ஆகும்.

(ஹரிஜன், 24-12-38)

நம்முடைய உடலானது ஆரோக்கியம் இழந்து நோய்ப்பட்டால் அதைப் பற்றிக் கவலிக்க வேண்டிய கடமை நமதாகும். ஆரோக்கியம் இழப்பது நம்முடைய குற்றம். நோயைக் கவனிக்காமலிருப்பது அதைவிடப் பெரிய குற்றம். செய்துவிட்ட குற்றத்தைத் திருத்திக் கொள்வது ஒருவனுடைய கடமையாகும். நேற்று பிழை செய்தோம் என்று, இன்று அந்தப் பிழையைத் திருத்துவதற்கு வேண்டிய முயற்சியை எடுக்கச் சோம்பக் கூடாது. ஏன் நோய்ப்பட்டேன் என்று ஆராய்ந்து கவலைப்பட்டுத்தான் தீர வேண்டும். எந்த நியதியைப் புறக்கணித்தேன் என்று ஆராய்ந்து பார்த்து நோயைத் தீர்த்துக் கொள்ள வேண்டும்.

எல்லாம் விதிப்படி நடக்கும் என்று நாம் சும்மா இருக்கலாகாது. ஆண்டவனுடைய இச்சைப்படி அனைத்தும் நடப்பது உண்மை. அவன் நம்மைப் போல் கண்டபடி நடப்பதில்லை. அவனுடைய இலக்கணம் வேறு; நம்முடைய இலக்கணம் வேறு. நியதிக்கு நியதியானவன் அவன். நியதி எப்போதும் தவறாது. உலகம் எல்லாம் மாறி மாறி இயங்கும். அவனுடைய நியதியோ, மாறாத நியதி.

(ஹரிஜன், 28-7-46)

முன்னேற்றம் என்பது ஒரேயடியாக வந்து விடாது. பிழைகள் செய்து, அறிவடைந்து பிழைகளைத் திருத்திக் கொண்டேதான் முன்னேற்றமடைய முடியும். முற்றிலும் நன்மையாக ஆண்டவன் நமக்கு எதையும் தரமாட்டான். மீண்டும் மீண்டும் செய்த பிழைகளைத் திருத்திக் கொண்டுதான் பல தோல்விகளுக்குப் பின் வெற்றி அடைய முடியும். இதுவே தனி மனிதனுடைய முன்னேற்றத்தைப் பற்றிய நியதி. அந்த நியதிப்படியே சமூக முன்னேற்றமும் அரசியல் முன்னேற்றமும் நடைபெறும். பிழை செய்யும் உரிமையும் அதைத் திருத்திக் கொள்ளும் உரிமையும் நமக்கு உண்டு. அதுவே முன்னேற்றத்துக்கு வழி.

(கட்டுரைகள் 1937)

# அழகைப் படைத்தது எதற்காக?

நஜன்

ராஜா ரவிவர்மா குடும்பத்தினர் அரச குடும்பத்துக்குச் செய்த உதவிக்காகக் கிளிமானூர் அரண்மனையை இவர்கள் உபயோகத்துக்கே விட்டிருந்தனர். அந்த அரண்மனைச் சுவர்களில் சிறுவன் ரவிவர்மா கரித் துண்டால் சித்திரங்களைக் கிறுக்கியிருந்தான். தாய் மாமனான ராஜராஜ வர்மா வந்து பார்த்தால் பையனை 'உரித்து'விடுவார் என்று உறவினர்கள் பயந்தனர். ஆனால் ராஜராஜ வர்மாவே ஓர் ஓவிய நிபுணராதலால் பையனின் திறமையை மெச்சி, 'இனி சுவரில் சித்திரம் போடாதே! காகிதமும் பென்சிலும் தருகிறேன். அதில் போடு' என்று சிறுவனை உற்சாகப்படுத்தினார்.

முதற் பாடமாக இயற்கைக் காட்சிகளை வரையவே அவருடைய மாமா சொல்லிக் கொடுத்தார். ஆனால் ரவிவர்மாவுக்கு மனித உருவை வரைவதிலேயே நாட்டம் இருந்தது.

அப்போது திருவனந்தபுரம் அரசரிடம் ஆஸ்தான ஓவியராக ராமசாமி நாயுடு என்பவர் இருந்தார். அவரிடம் பயிற்சி பெற ரவிவர்மா ஒப்படைக்கப்பட்டார். அச்சமயம் அரச குடும்பத்தினரின் படங்களை வரைவதற்காக அரண்மனையிலேயே தங்கியிருந்த தியோடார் ஜென்ஸன் என்பவரின் பரிச்சயமும் சிறுவன் ரவிவர்மாவுக்குக் கிடைத்தது.

அரச குடும்பத்துடன் திருமணச் சம்பந்தம் ஏற்பட்டதால் இவருடைய ஓவிய ஆற்றல் வெளிப்படச் சகல வசதிகளும் கிடைத்தன.

இவருடைய முதல் வெற்றி ஒரு மலையாள மங்கையின் எழில் உருவம். இந்த ஓவியத்துக்குச் சென்னை ஓவியக் காட்சி சாலையில் தங்கப் பதக்கம் பரிசு கிடைத்தது. இந்த ஓவியம் வியன்னு நகரில் நடைபெற்ற அகில உலக நாடுகளின் ஓவியக் கண்காட்சிக்கு அனுப்பப்பட்டது. அங்கேயும் அதற்குத் தங்கப் பதக்கமும் நற்சான்றும் கிடைத்தன. அடுத்த வருடம் சென்னை ஓவியக் காட்சியில் பரிசு பெற்றது யாழ் மீட்டும் எழில் மங்கையின் உருவம். இப்படத்தை எட்வர்ட் இளவரசர் (பின்னர் ஏழாவது எட்வர்ட் மன்னர்) 1875ல் இந்தியாவுக்கு விஜயம் செய்தபோது அவருக்குத் திருவாங்கூர் மன்னர் பரிசளித்தார்.

ரவிவர்மா அடுத்ததாகத் தீட்டியது சகுந்தலை. தன் கணவனுக்குப் படுத்தவண்ணம் காதல் கடிதம் எழுதுவது போன்று அமைந்த இந்தப் படத்தைக் கண்காட்சிக்கு வைத்தவுடனேயே பக்கிங்காம் கோமகன் அதை ஏராள விலை கொடுத்து வாங்கி விட்டார்.

இவருடைய அடுத்த படம் 'பூமிதேவியின் அணைப்பில் சீதை'. பரோடா மன்னரின் திவானாக இருந்த ஸர் டி. மாதவராவின் உள்ளத்தை இப்படம் கவர்ந்து விட்டது. இதை அவரே வாங்கி விட்டார். பூனாவில் நடைபெற்ற கண்காட்சியில் இப்படம் இடம் பெற்றிருந்தது. பம்பாயில் அப்போது கவர்னராக இருந்த பெர்குஸன் இப்படத்தை விரும்பி அதை வாங்க முன்வந்தார். ஏற்கெனவே மாதவ ராவின் உடைமையாகி விட்டதை அறிந்து ரவிவர்மாவுக்கே அம்மாதிரி மற்றொரு படத்தை வரைந்து அனுப்பும்படி பெர்குஸன் கேட்டுக் கொண்டார். ரவிவர்மாவும் இதற்கு இணங்கினார்.

1892ல் அமெரிக்காவில் சிகாகோ நகரில் நடைபெற்ற கண்காட்சிக்கு ரவிவர்மா தம்முடைய பத்து ஓவியங்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பினார். இரண்டு படங்கள் தங்கப் பதக்கங்களைப் பெற்றன.

இதற்கிடையில் ரவிவர்மாவின் மாமன், தாயார், மனைவி ஆகியோர் ஒருவர்பின் ஒருவராகக் காலமானது அவரைப் பெரிதும் வாட்டியது. துக்கத்தை மறப்பதற்காகச் சுற்றுப் பிரயாணத்தை மேற்கொண்டார். இப்பிரயாண வரலாற்றை அவருடைய சகோதரர் ராஜராஜ வர்மா ஆங்கிலத்தில் புத்தகமாக எழுதி வெளியிட்டார். ரவிவர்மாவின் புகழ் நாளுக்கு நாள் அதிகரித்தது. இந்திய அரசாங்கம் அவருக்கு கெய்ஸர்–இ–ஹிந்த் என்ற மிக உயர்ந்த விருதை வழங்கியது.

ரவிவர்மாவுக்குத் தமிழிடமும் தமிழர்களிடமும் நிறையப் பற்றுதல் இருந்தது. தமிழரிடையே தாம் பேசும் கூட்டங்களில் அவர் தமிழில்தான் பேசுவது வழக்கம்.

ரவிவர்மாவின் படங்கள் அரண்மனைகளில் மட்டுமின்றி எல்லா வீடுகளிலும் இடம்பெற ஓர் அச்சகத்தை ஸர். டி. மாதவ ராவ் ஏற்படுத்திக் கொடுத்தார்.

தஞ்சை, ஓவியம் வளர்ந்த இடம். இந்தத் தஞ்சை பாணி ரவி வர்மாவின் படங்களில் காணப்படுவதாக ஓவிய நிபுணர்கள் கூறுகிறார்கள். 1906ல் 'காதம்பரி' ஓவியத்தை முடிக்காமல் அவர் காலமானார்.

''ஆண்டவன் அழகைப் படைத்தது எதற்காக? ஓவியர் ரவி வர்மா தம் அறிவுக் கண்களால் அதை நுகர்வதற்காகத்தான்'' என்கிறார் மகா கவி பாரதியார்:

மலரினில் நீல வானில்
மாதரார் முகத்தி லெல்லாம்
இலகிய அழகை ஈசன்
இயற்றினன்: கீர்த்தி இந்த
உலகினில் எங்கும் வீசி
ஓங்கிய ரவி வர்மன்
அலகிலா அறிவுக் கண்ணால்
அனைத்தையும் நுகரு மாறே!



ரவி வர்மாவின் நினைவுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் பாரதஅரசு தபால்தலை வெளியிடவிருக்கிறது

# சிங்கக் கழுகு

(16) பீட்டர் ஓ டான்னல்

கோடாலிக் காம்பினால் அல்போ ரினி தாக்க வந்தபோது பின்னுக் குப் பாய்ந்து தப்பிய மாடஸ்டி, சரேலென்று தரையில் ஊன்றிய கரங்களால் உடலைத் தாங்கியபடி அவன் முழங் கையில் ஓர் உதை கொடுக்கிறாள்.


















ஹல்லோ கார்வின்! எப்படி இருக்கிறாய் நீ?
தேவலாம். தோளில் குண்டு பதிந்திருக்கிறது. பல்லைக் கடித்துக் கொண்டு வேதனையைப் பொறுக்கலாம்.


காயத்தின் மேல் தார் அப்பியிருக்கிறேன். இப்போதைக்கு அது போதும். அல்போரினி எங்கே மறைந்தான்?
அது மனிதர்களே இருந்த சுவடு தெரியாமல் தொலைத்துக் கட்ட உதவும் பாதாளக் குகை. பழங்காலத்திய அமைப்பு.


கீழே விழும்போதே உடலில் பல இடங்களில் அடிபட்டுச் சாக உதவுமாறு பாறைக் கற்கள் துருத்திக்கொண்டிருக்கின்றன பார்! அல்போரினி போன்ற அயோக்கியர்களுக்கென்றே ஏற்பட்டது போல் இல்லையா?
1780


என் காலணியில் பூட்டுத் திறக்கும் கருவி ஒன்று இருக்கிறது. இந்தத் துப்பாக்கியைச் சற்றுப் பிடி; அதை எடுக்கிறேன், விலங்கை நீக்க.
ஜூலியின் துப்பாக்கி!


கார்வின்! வலது கரத்தாலேயே உனக்குக் குறி பார்த்துச் சுடத் தெரியாது. அதிலே குண்டு வேறு பாய்ந்துவிட்டது. இடது கரத்தில் துப்பாக்கி பிடித்து என்ன செய்வாய்?


அவசியம் நேர்ந்தால் நெருங்கி வந்து துப்பாக்கியின் அடிபாரத்தால் அடிக்கலாமே என்றுதான்...
நல்ல வேடிக்கை!
1781


மாட்டி போவை அந்தப் பாதாளக் குகைக்குள் போட்டு விடலாம்; ஆயிலி விஷயம் என்ன?


கடல்துறையில் படிக்கட்டு அருகே மிதக்கிறது அவன் உடல். அவனைக் கப்பலில் தூக்கிப் போட்டுக்கொண்டு போய் உடலை ஒரு பாறையுடன் பிணைத்து ஆழ்கடலில் தள்ளிவிடலாம்.


சரி, எல்லாவற்றையும் சீக்கிரம் முடிப்போம். பொழுது விடிய இரண்டு மணி நேரம் முன்பு நாம் நடுக்கடலில் ஒருவரைச் சந்திக்க வேண்டும். அப்புறம் இந்தத் தோனைக் கவனிக்கப் போகிறேன் நான்.
1782


கப்பலிலுள்ள பாரம் தூக்கி
பீடத்துடன் சேர்த்துத் தூக்கி மேல் தளத்தில் வைக்கிறது.


அச்சிறு கப்பல் மெல்லக் கரையை விட்டு விலகிச் செல்கிறது.
அடுத்தாற் போல் என்ன, மாடஸ்டி?
வாம்ப்ஸனின் கப்பல் ரிமினி துறைமுகத்துக்கு வந்திருக்கும் என்று எனக்குத் தெரியும். அதனால் அவனுக்கு நேற்று டெலிபோன் செய்தேன்...


...அவன் உதவி தேவை என்றேன். நடுக் கடலில் எங்கு எப்போது சந்திப்பது என்பது பற்றி ஒரு முடிவுக்கு வந்தோம்.
(தொடரும்)

டாடா டெக்ஸ்டைல்ஸ் வெளியீடு!

# பேட்டிஸ்ட்

இலட்சோப லட்சம் ரசிக
பெருமக்களின் இதயங்களை
கொள்ளை கொள்ளும்
வரலாறு காணாத படைப்பு.
'டெரீன்'/ காட்டன ஷர்ட்டிங்.

சுருங்கிடும் சுருக்கங்களை வென்று வீழ்த்தி, இஸ்திரி பெட்டிகளை எட்டி உதைத்து எத்தனை பழசானாலும் என்றும் வெண்மை பளிச்சிட, ஏறுநடை போடும் எழுச்சிமிக்கத் தயாரிப்பு. இப்படியொன்று இதுவரை துணிவானில் சுடர்விட்டதில்லை என பார்த்தவர் பாராட்டுகிறார்கள்! கோட்டன் ஷர்ட்டுகள் பேட்டிஸ்டின் கைவண்ணமே

தயாரிப்பாளர்கள்:

டாடா டெக்ஸ்டைல்ஸ்



கண்டு களிப்புங்கள் – பேட்டிஸ்ட் இப்போது உங்கள் அருகமைந்த கடைகளில் கிடைக்கின்றன

# அத்தியாயம் ஏழு

தன் சிற்றன்னையிடம் பொதுவாகக் குடும்ப விவகாரங்களைப் பற்றிப் பேசிய பிறகு தனது தகப்பனார், தாத்தா இவர்களின் உடல் நிலை பற்றிக் கேட்டாள் மஞ்சுளா. அவர்களை உடனே காண விரும்புவதாகவும் தெரிவித்தாள்.

"அப்பாவையும், தாத்தாவையும் காண்பதற்கு உன் உள்ளம் எப்படித் தவிக்கிறது என்று எனக்குத் தெரியும் மஞ்சுளா. ஆனால் இன்றிரவு நீ அவர்களைச் சந்தித்துப் பேச முடியாமல் இருப்பதை நினைக்க எனக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது. உன் தாத்தா இப்போதுதான் கண்ணை மூடியிருக்கிறார். அவர் தூங்குவதே அபூர்வம். டாக்டர் ஈசுவரன் அவர் தூங்கும்போது யாரும் எந்தக் காரணத்தைக் கொண்டும் உள்ளே போகக் கூடாது என்று எச்சரித்து விட்டுப் போயிருக்கிறார். உன் அப்பாவின் நிலையை நினைத்தால்தான் பயமாக இருக்கு..." குரல் தழுதழுத்தது கோகிலாவுக்கு



இமையோரத்தில் கண்ணீர் திரண்டு ஜொலித்தது. புடவைத் தலைப்பினால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

''நீ வருத்தப்படாதே, சின்னம்மா! அப்பாவுக்கு அதெல்லாம் ஒன்றுமில்லை'' என்றாள் மஞ்சுளா.

'' ஒன்றுமில்லாமல் இருக்க வேண்டும் என்றுதான் இரவு பகல் எந்த நேரமும் ஆண்டவனை வேண்டிக் கொண்டிருக்கிறேன். இவ்வளவு பெரிய குடும்பத்தையும் சொத்தையும் நிர்வகிக்கும் பொறுப்பை என் தலையில் சுமத்திவிட்டு இப்படி மலை போல இரண்டு பேரும் படுத்துக் கொண்டிருக்கிறார்களே என்பதை நினைக்கும் போது எத்தனை வேதனையாகத் தெரியுமா இருக்கிறது? சாயந்திரம் உன் அப்பாவின் நிலை ஒரே கவலையாகப் போய்விட்டது. அண்ணாவுக்கு உடனே போன் செய்தேன். அவனும் இப்போதுதான் வந்து ஊசி போட்டான். தன் நினைவு இல்லாமல் கிடக்கிறார்,'' என்றாள் கோகிலா.

அதே சமயத்தில் ஓசைப்படாமல் பூனை போல டாக்டர் ரகுநாத்—கோகிலாவின் அண்ணா—உள்ளே நுழைந்தார். அவரைத் தொடர்ந்து ஒரு நர்ஸ் உருவமும் வந்தது. உடை நர்ஸினதாக இருந்ததே தவிர பகட்டும் பார்வையும் உடல் கட்டும்... அவள் ஒரு சினிமா நட்சத்திரம் போலத்தான் தோன்றினாள். அழகிதான்; ஆனால்

# சுழிக்காற்று

## கௌசிகன்



கண்ணியமான அழகல்ல. இளங் காளைகளின் உள்ளங்களைத் துன்புறுத்தும் கொடிய அழகு. எல்லோர் கவனத்தையும் காந்தம் போல் கவர்ந்து விட்ட அந்த அழகியை டாக்டர் ரகுநாத் அறிமுகப்படுத்தி வைத்தார்.

''என்ன மஞ்சுளா, அப்படிப் பார்க்கிறாய்? நர்ஸ் மோகனாவை உனக்குத் தெரியாதா ? நான்கு வருடங்களாக அவள் என் டிஸ்பென்சரியில்தான் இருக்கிறாள். அத்தை வழியில் இவள் எனக்கு உறவுகூட. உன் அப்பாவைக் கவனித்துக் கொள்வதற்காக இவளை இங்கு பிரத்தியேகமாக நியமித்திருக்கிறேன். அப்பாவின் வியாதிக்கு மருந்துகளைவிடக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்துப் பணிவிடை புரிவதுதான் முக்கியம். ஓய்வும் அமைதியும்தான் அவர் வியாதியைக் குணப்படுத்தும். அதற்குச் சிறிதும் பங்கம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவே மோகனா இங்கு இருக்கிறாள்'' என்றார் டாக்டர் ரகுநாத்.

''தாத்தாவின் விஷயம் எப்படி?'' என்று கேட்டாள் கவலையுடன் மஞ்சுளா.

''தருமலிங்கம் என்னுடைய 'பேஷண்ட்' இல்லை. தாத்தாவின் பிடிவாத குணம்தான் உனக்குத் தெரியுமே. பரம்பரை வைத்தியரான ஈசுவரன்தான் தம்மைக் கவனிக்க வேண்டும் 'என்று சொல்லி விட்டார். நான் சிகிச்சை

# இவர் ஜானகி

இன்முகங்காட்டும் இல்லாள் • அன்பூட்டும் அன்னை • தாலாட்டும் தாய்

## "தரமானது எதுவோ அதுவே எனக்கு வேண்டும்"

ஜானகிக்கு நாள் முழுவதும் கடுமையான வேலை. ஆம், தினமுமே தான்.

உடம்பிலே சக்தியும், உள்ளத்திலே ஊக்கமும் உண்டானால் எதையும் சமாளித்துவிடுவேன் என்கிறார் அவர்!

'ஹார்லிக்ஸ்' அவருக்கு ஊக்கமும் சுறுசுறுப்பும் அளிக்கிறது.

'ஹார்லிக்ஸ்' — தரமானது அதுவே. ஜானகிக்கு நாள் பூராவும் உடம்புக்கு வலுவூட்ட வேண்டிய புரதமும் ஊட்டச் சத்துக்களும் அளித்து, ஊக்கத்துடன் இருக்க 'ஹார்லிக்ஸ்' உதவுகிறது.

தூய்மையான முழு ஆடைப்பால், செழுமையான கோதுமை மற்றும் இதர இயற்கை உணவுச்சத்துக்கள் நிறைந்துள்ளது 'ஹார்லிக்ஸ்'.

60 ஆண்டுகளுக்கும் மேலாகவே, டாக்டர்களாலும் சிபாரிசு செய்யப்பட்டு வருகிறது 'ஹார்லிக்ஸ்'.

நீங்களும் உங்கள் குடும்பத்தினரும் உடல் நலம் பேணி, உற்சாகமாய்த் திகழ, குறைவற்ற ஊட்டமும் உறுதியான சக்தியும் பெற தினமும் அருந்துங்கள் 'ஹார்லிக்ஸ்'.




**'ஹார்லிக்ஸ்'—தரமானது அதுவே**

"ஹார்லிக்ஸ்" என்ற பெயர் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க் ஆகும்

HL-1845 Tml R.

செய்வதை அவர் விரும்பவில்லை. ஏதோ நல்ல காலமோ அல்லது சந்தர்ப்பங்களின் அவசியமோ தெரியாது — உன் தகப்பனாருக்குச் சிகிச்சை செய்யும் பொறுப்பை உன் அம்மா ஈசுவரனிடமிருந்து என்னிடம் ஒப்படைத்தாள். தாத்தாவின் நிலை பற்றி டாக்டர் ஈசுவரன் உனக்கு விளக்கமாகச் சொல்வார்'' என்றார் டாக்டர் ரகுநாத். டாக்டர் ஈசுவரனிடம் அவருக்கு உள்ள வெறுப்பு அவரது வார்த்தைகளில் நன்கு தொனித்தது. தான் தருமலிங்கத்தைக் கவனிக்காததினால் அவர் நிலை மோசமாகிக் கொண்டிருப்பதாகவும் மஞ்சுளாவின் தகப்பனாரான கந்தசாமியின் உயிரைத் தன் அபாரத் திறமையினாலும் சிகிச்சையாலும் கட்டிப் பிடித்து வைத்திருப்பது போலவும் இருந்தது அவர் பேச்சு.

டாக்டர் ரகுநாத் தம் கைக் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு பரபரப்புடன் தமக்கு நேரமாகிவிட்டதாக மஞ்சுளாவிடம் விடைபெற்றுக்கொண்டார்.

மஞ்சுளா தன் தாயாரிடம் அவர்கள் தங்குவதற்கான ஏற்பாடுகளைப் பற்றிப் பிரஸ்தாபிக்கலானாள்.

''சித்தி! நாங்கள் எனக்குப் பிடித்தமான திராட்சைக் கொடி வீட்டிலேயே தங்குகிறோம்'' என்றாள் மஞ்சுளா. சேகரும் கோபாலும் ஒன்றாக இருந்தால் மஞ்சுளா தனித்து இருக்க அங்கு வசதியான அறைகள் இருந்தன.

''திராட்சைக் கொடி வீட்டில் நீங்கள் தங்குவதற்கில்லை, மஞ்சுளா! வேப்ப மரத்துப் பங்களாவில்தான் தங்கவேண்டும்'' என்றாள் கோகிலா.

''எதற்காக....? திராட்சைக் கொடி வீடுதான் எனக்குப் பிடித்தமான, என் உள்ளம் கவர்ந்த இடம். அதில்தான் நான் தங்குவேன் சித்தி!''

''இன்னும் உன்னை விட்டு அந்தப் பிடிவாதக் குணம் போகவே இல்லையே, மஞ்சுளா!'' என்றாள் கோகிலா, உதட்டில் சிரிப்பு குறுகுறுக்க. ''உன் வருங்காலக் கணவரும் அவர் தோழரும், கூரையே இல்லாத தரையெல்லாம் நீர் தேங்கி இடிந்து பாழான ஒரு வீட்டில் தங்கி இருக்கப் பிரியப்படமாட்டார்கள் என்று நினைக்கிறேன்.''

சித்தியின் வியாக்கியானம் மஞ்சுளாவிடம் திகைப்பை உண்டாக்கிற்று. ''என்ன சித்தி இது? திராட்சைக் கொடி வீட்டுக்கு என்ன நேர்ந்தது? தாத்தாவுக்கு ரொம்பப் பிடித்த இடமாயிற்றே, அது?''

''ஒரு மாதத்துக்கு முன்னால் இந்தப் பக்கமெல்லாம் கோரமான புயல் வீசியதைப் பற்றிப் பத்திரிகைகளில்கூட நீ படிக்கவில்லையா?''

''படித்தேன். பதறியும் போனேன்.''

''அந்தப் புயல் விளைந்த கோரங்களை நீ நாளைக் காலையில் நமது பண்ணையைச் சுற்றிப் பார்த்தால் தெரிந்து கொள்ளுவாய். திராட்சைக் கொடி வீடு புயலில் ரொம்பச் சேதமாகிவிட்டது. அதைச் சீர்திருத்தி ஒழுங்காக்க நேரமோ, மனமோ, வசதியோ ஏதும் இல்லை. பெரியவர்கள் இரண்டு பேரும் படுத்த படுக்கையாகக் கிடக்கும்போது எதைச் செய்யத்தான் மனம் இடம் கொடுக்கிறது? வேப்பமரத்துப் பங்களாவும் ரொம்பச் சௌகரியமாக இருக்கும் மஞ்சுளா. நீ வரப் போகிறாய் என்று அதை இன்னும் சீராக்கித் தயாராக வைத்திருக்கிறேன்'' என்று சொல்லியவாறே வாசல் பக்கம் சென்று, ''வேலப்பா, வேப்ப மரத்துப் பங்களாவிலே விளக்குப் போட்டயா? இந்தப் பெட்டி படுக்கைகளையெல்லாம் கொண்டு போய் அங்கே வை, போ'' என்று உத்தரவிட்டாள். பிறகு, மஞ்சுளாவைப் பார்த்து, ''மஞ்சு, நீங்கள் போய்க் குளித்து உடை மாற்றிக் கொண்டு தயாராக இருங்கள். நான் சாப்பாடு தயாரானதும் உனக்கு டெலிபோனில் அறிவிக்கிறேன் என்ன?'' என்று அர்த்தமுள்ள பார்வையால் சேகரையும் அவளையும் பார்த்தாள்.

வேப்பமரத்துப் பங்களாவுக்கு இளைஞர்கள் மூவரும். இருளில் முன்னால் கோபாலோடு செல்லும் வேலப்பனிடம் மஞ்சுளா கேட்டாள்: ''வேலப்பா, திராட்சைக் கொடி வீட்டைச் சட்டென்று எங்களுக்காக உடனே ஒழுங்கு செய்து தரமுடியாதா உன்னால்?''

பெட்டி படுக்கைகளைச் சுமந்தபடி ஆடி அசைந்து முன்னால் சென்று கொண்டிருந்த வேலப்பன், ''புயலின் போது அது ரொம்பப் பழுதடைஞ்சு போச்சுங்க, சின்னம்மா! அநேகமா எல்லா ஜன்னல் கதவுகளும் பேந்து போச்சுங்க. மேலே உள்ள ஓடுங்ககூடப் போயிடுச்சு. உள்ளெல்லாம் ஒரே சேறு. ஆனால் உடனே மராமத்துப் பார்த்திருந்தால் அதை நேர் செய்திருக்கலாம். நான் கூட சில ஜன்னல்களை ரிப்பேர் செய்ய ஆரம்பிச்சேன். ஆனால் பெரியம்மா தான் வேணாம்னுட்டாங்க. 'தோப்பு, தொரவு, வயலுகளிலே எத்தனையோ வேலை இருக்கு. அதுங்களை நேர் செய்தாலும் செய்யலாம். இந்தத் திராட்சைக் கொடி வீட்டைக் கட்டிக்கிட்டு ஏன் அழறே? பேசாமப் போ'ன்னு சொல்லிப் பலகைகளை வைச்சு எல்லாத்தையும் அடைச்சு மூடிப் போட்டாங்க.

நம்ம பெரிய ஐயா நடமாட்டம் இல்லாமப் படுத்ததுக்கப்புறமே அந்தத் திராட்சைக் கொடி வீட்டுக்கு மதிப்புப் போச்சம்மா'' என்று பேசிக்கொண்டே போனவன், ''சின்னம்மா, உங்க சித்தப்பாரு இப்பெல்லாம் இங்கே அடிக்கடி வந்துக்கிட்டிருக்காரு, தெரியுமா? சின்ன வயசிலே செஞ்ச தப்பிதத்தைப் பெரியய்யா மறந்து மன்னிச்சுடுவாருன்னு எதிர்பார்க்கிறாரு. ஆனால் வந்தால் இங்கே அதிக நாள் தங்கறதில்லே. எத்தனையோ வருஷங்களா இந்தப் பக்கமே வராம இருந்தவரு, இப்ப இங்கே வராரே, அதைச் சொல்லுங்க!'' என்றான்.

**பா**தை ஓர் இடத்தில் திரும்பியது. அங்கே எதிரில் அடர்ந்து வளர்ந்து கம்பீரமாகக் காட்சி அளித்த இரண்டு பெரிய வேப்ப மரங்களின் நடுவிலே ஓர் அழகிய சிறு வீடு காணப்பட்டது. வேப்பமரத்தின் கிளைகள் மங்களூர் ஓடு வேய்ந்த வீட்டைக் கவிழ்ந்து கொண்டு பார்ப்பதற்கு ரமணீயமாக இருந்தது. வெளிப் பார்வைக்குப் பழங் கால ஓட்டு வீடாகத் தோன்றினாலும் உள்ளே சகல நவீன வசதிகளும் நிறைந்து, நாகரிகமான முறையில் கட்டில், மெத்தை, சோபா முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

வேலப்பன் பெட்டி படுக்கைகளை அங்குள்ள ஓர் அறையில் கொண்டு போய் வைத்து விட்டு வெளியில் வந்து தலைப்பாகையை அவிழ்த்து முகத்தைத் துடைத்தபடி வராந்தாவில் வந்து நின்றான். பிறகு விடைபெற்றுக்கொண்டு சென்றான். சேகர் மஞ்சுளா பின்தொடர அந்தப் பங்களாவுக்குள் நுழைந்தான். ஊன்றுகோலை ஹாலின் நடுவிலிருந்த வட்ட மேஜை மீது வைத்துவிட்டு ஒரு சோபாவில் போய் விழுந்து கால்களைப் பரக்க நீட்டி, 'அப்பாடா!' என்று உட்கார்ந்தான்.

''குளியல் அறை எங்கே இருக்கிறது? அதைச் சொல், முதலில்!'' என்று 'டர்க்கி' டவலுடன் தயாராகி விட்டான், கோபால். நாளைக்குமூன்றுதடவை குளிக்கும் பிரகிருதி அவன். கோபாலுக்குக் குளியலறையைக் காட்டிவிட்டு வந்த மஞ்சுளா ஆர்வம் பொங்கச் சேகரின் மிக மிக அருகில் மேலே சாயாத குறையாகச் சோபாவின் கைப் பிடி மீது அமர்ந்து கொண்டாள்.

'கடைசியில் தனிமை கிட்டியது' — என்ற உவகையுடன் சேகர் மஞ்சுளாவின் மெத்தென்ற இடையில் கைகொடுத்து அவளைத் தன் பக்கம் இன்னும் அருகே இழுத்து அணைத்துக் கொள்ள முயலும் போது வெளிக் கதவை யாரோ 'டொக்... டொக்... டொக்...' என்று ஓசையிட்டு அழைப்பது காதில் விழுந்தது.

மஞ்சுளா துள்ளி எழுந்து போய்க் கதவைத் திறந்தாள். மங்கிய வெளிச்சத்தில் மஞ்சுளாவுக்குப் பழக்கமான பெண் ஒருத்தி நின்று கொண்டிருந்தாள் ஒற்றைக் காலில். ஆமாம், மற்றொரு காலின் குதிகால் உயர்ந்த காலணியை உடலை வளைத்தபடி ஏதோ சரி செய்து கொண்டிருந்தாள் அந்தப் பெண். அவள் முகம் திரும்பி இருந்ததால் மஞ்சுளாவுக்குச் சட்டென்று அவளை அடையாளம் தெரியாவிட்டாலும் மறு விநாடி புரிந்து கொண்டாள். நிர்மலா தான் அது. அவள் முகத்தில் பீதியும் பரபரப்பும் விரவிக் கிடந்தன.

''மஞ்சுளா, இந்த வேளையில் உன் தனிமையையும் அமைதியையும் கெடுத்துக் கொண்டு நான் வந்ததற்கு வருத்தப்படுகிறேன். போலீஸ் ஸ்டேஷனிலிருந்து வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருக்கும் போது நீ இந்த வேப்பமரத்துப் பங்களாவுக்குள் போவதைக் கவனித்தேன். ஏதோ ஒரு தவிப்பு. என் கால்கள் என்னை இங்கே கொண்டு வந்து நிறுத்தி விட்டன. என் அன்னாவின் உடலை நாளைக்குத்தான் என்னிடம் தருவார்களாம்....'' இதைச் சொல்லும் போது அவள் குரல் உடைந்துவிட்டது. ''நான் வருகிறேன் மஞ்சுளா!'' என்று போகத் திரும்பினாள் நிர்மலா.

மஞ்சுளா அவளை விடவில்லை. அவள் கையைப் பற்றிக் கொண்டு, ''அசடு, அசடு! உன்னால் என் அமைதி கெடவில்லை. அதற்காக நீ இப்படி ஓடவேண்டாம். உள்ளே வா'' என்று கூறியபடியே அவளை இழுத்துக் கொண்டு உள்ளே போனாள்.

மஞ்சுளாவோடு உள்ளே நுழைந்த நிர்மலா அடைபட்ட குரலில், ''அவர், ...ராமு இங்கு இருந்தவரை, அந்தச் சம்பவம் நடக்கும் வரை இந்த வீட்டில் தான் தங்கியிருந்தார். அவர் மறைந்த பிறகு உன் சித்தி கோகிலா அவருடைய உடைமைகளை யெல்லாம் அப்புறப்படுத்தி வேறு இடத்தில் ஓர் அறையில் போட்டுப் பூட்டி விட்டாள். புயல் அடித்ததே அதன் பிறகு இன்று வரை இந்த வேப்பமரத்துப் பங்களா காலியாகத்தான் பூட்டிக் கிடந்தது'' என்ற போது நிர்மலாவின் குரல் கம்மிப் போயிற்று.

''ராமு இங்குதான் இருந்தானா?'' என்று கேட்டுக் கொண்டே நிர்மலாவுடன் ஓர் இரட்டை சோபாவில் போய் உட்கார்ந்தாள் மஞ்சுளா. அவள்

# சோப் ஒன்று-பலன் மூன்று!

# நிகோ கிருமிநாசினி சோப்

## மற்றெந்த சோப்பையும் விட உங்கள் சருமத்திற்கு மிகுந்த பாதுகாப்பளிக்கிறது

**1** நிகோ சருமக் கிருமிகளைக் கொல்லுகிறது

**2** நிகோ உடல் துர்நாற்றத்தைப் போக்குகிறது

**3** நிகோ உடலைத் துப்புரவாக்கிப் பாதுகாப்பளிக்கிறது

நீங்கள் ஆரோக்கியமான சருமத்தைப் பெற, நாள்தோறும் நிகோ சோப் தேய்த்துக் குளியுங்கள். நிகோவின் [illegible] நுரைவளம் சரும நோய்க் கிருமிகளைக் கொன்று, உங்கள் சருமத்திற்கு ஆரோக்கியமளிக்கிறது. நிகோவிலுள்ள மருந்துப் பொருள்கள் வியர்வையினால் ஏற்படும் துர் நாற்றத்தைப் போக்குகின்றன. நிகோ சின்னஞ்சிறிய சருமத் தொற்றுகளையும் எதிர்த்துப் போராடி, சருமத்துக்கு மென்மையளிக்கிறது. அதோடு மினுமினுப்பும் புதுமையும் தருகிறது. இது மட்டுமல்ல; முகப் பருக்கள் மற்றும் வேர்க்குருவிலிருந்தும் உங்கள் சருமத்துக்குப் பாதுகாப்பு தருகிறது நிகோ. ஷாம்புவாகக்கூட இதைப் பயன்படுத்தலாம். இதனால் பொடுகு விழாமல் தடுக்கிறது நிகோ. எனவே, இன்று முதலே, நிகோ சோப் உபயோகிக்கத் தொடங்குங்கள்




*TRIPLE ACTION*

## NEKO

**The Original Germicidal Soap**

**PARKE-DAVIS**

JAISONS 72 Tam

# மோகனப் புன்னகை
# கோலினஸ் புன்னகை




மூச்சினில் மிளிரும் தூய்மை
மலரும் நாணிடும் அருமை!

தூய இன் மூச்சு! பளிச்சிடும் பற்கள்!
மோகனப் புன்னகை!
கோலினஸ்—வாழ்வுக்கு இனிமை
கூட்டி வாழ்விக்கும் பெயர்!

**காலையிலும் இரவிலும் கோலினஸ் சூபர் ஒயிட் பற்பசையால் பல் துலக்குங்கள்.**

**சூப்பர்...கோலினஸ்** சூபர் ஒயிட் டூத்பேஸ்ட்

Regd. User of TM: Geoffrey Manners & Co., Ltd.

K-25

பார்வை சேகரின் மீது பதிந்தது. கண் மூடிக் களைத்துப் போய் சோபாவில் சாய்ந்து கிடக்கும் அவன் நிலை பரிதாபமாக இருந்தது. சட்டென்று எழுந்தாள். ஒரு மூலையில் அன்று காலையிலேயே வேலப்பன் இவர்கள் வருகையை எதிர்பார்த்துத் தயாராக வைத்திருந்த மண் பானையிலிருந்த குளிர்ந்த தண்ணீரை மூன்று தம்ளர்களில் எடுத்தாள். தயாராகக் கொண்டு வந்திருந்த பழரசத்தைப் பெட்டியிலிருந்து எடுத்துத் தம்ளர் நீரில் ஊற்றிக் கலக்கிச் சுவை மிக்க குளிர்ந்த பானம் தயாரித்தாள்.



''ஆபீசுக்கு 'லீசர்ன்' கொண்டு போகப் போறீங்களா எதுக்கு?''

''மானேஜரிடம் அவர் தர்ற சம்பளம் போதவில்லை என்று கண்ணீர் விட்டுக் கதறத்தான்!''

பிறகு அருகே சென்று ஆசையோடு சேகரின் தோள்களை அழுத்தியபோது அவன் நயனங்கள் திறந்து கொண்டன. குளிர் பானத்தை அவனிடம் நீட்டினாள். இன்னொன்றை நிர்மலாவிடம் கொடுத்துத் தானும் ஒன்றைச் சுவைத்தபடி அவள் அருகிலேயே போய் அமர்ந்து கொண்டாள்.

பானத்தைக் கையில் வாங்கிக் கொண்ட நிர்மலாவின் கண்களில் கண்ணீர் பொங்கி வழிந்தது. ''மஞ்சுளா, என்னைப் பற்றி உனக்குத் தெரியும். ஆனால் உன் சித்தி என்னைக் குடிகாரி என்று கூறி வேலையிலிருந்து நீக்கியதை நினைக்கும் போதுதான் வேதனையாக இருக்கிறது.''

''குடிகாரி என்றா...?'' வியப்போடு விழித்தாள் மஞ்சுளா.

''ஆமாம். உன் அப்பாவின் உடல் நிலை அன்றிரவு ரொம்பக் கடுமையாக இருந்ததென்னவோ உண்மைதான். நானும் விழிப்புடன்தான் கண்காணித்து வந்தேன். ஆனால் நள்ளிரவில் எப்படியோ தூங்கிப் போய் விட்டேன். அதுதான் எனக்கு இன்னும் புரியவில்லை. என்னை எழுப்ப எத்தனையோ முயன்றும் முடியவில்லையாம். என் படுக்கையில் தலையணையின் கீழ் 'விஸ்கி' பாட்டில் வேறு இருந்ததாகக் கூறுகிறாள் உன் சித்தி.''

'' அது எப்படி உன் படுக்கைக்கு வந்தது ?''

''அதுதானே எனக்கும் புரியவில்லை. 'எனக்கு அதன் ருசியே தெரியாது; பார்த்ததுகூட இல்லை' என்று எவ்வளவோ கூறியும் உன் சித்தி நம்பவில்லை. ஆனாலும் எனக்கு அன்று அப்படி ஒரு மயக்கம் — தூக்கம் ஏன் வர வேண்டும்? எனக்கு யாரோ மருந்திட்டிருக்க வேண்டும் என்றுதான் நினைக்கிறேன்.''

''மருந்தா? எதற்கு? நீ மயங்கித் தூங்கி நினைவிழக்கவேண்டும் என்றா?''

''ஆமாம். டிராக்டரை விற்க ராமு போனதினால் ஏற்பட்டதுதான் எல்லாம். பெருந் தொகையைக் கையில் வைத்துக் கொண்டு பிரயாணம் செய்வதா அல்லது அதை ஒரு பாங்கியில் கட்டி, 'டிராப்ட்'டாக வாங்கி வரவா என்று அங்கிருந்து டெலிபோன் செய்து கேட்டிருக்கிறார் ராமு. டிராப்ட் வாங்கி அனுப்பி விட்டால், தான் தாமதித்து வரலாம் என்பது அவர் எண்ணம்.

'' அன்று பகல் எனக்குப் போன் செய்த போதும் இதைத்தான் கூறினார். அப்போதே புயலுக்கான அறிகுறிகள் தோன்ற ஆரம்பித்திருந்தன. உன் அப்பாவோடு பேசிய பிறகு ராமு தன் திட்டங்களை மாற்றிக் கொள்ளும்படியாயிற்று. உடனே தாமதிக்காமல் பணத்துடன் கிளம்பி விடும்படி உன் அப்பா சொல்லியிருக்கிறார். ஆகவே, ராமு தம் சொந்த அலுவல்களுக்காகத் தாமதிப்பதைக் கைவிட்டு உடனே அங்கிருந்து கிளம்பியிருக்கிறார். அன்று மாலையே பேய்க் காற்றும் பெரு மழையும் புயலும் ஆரம்பமாகி விட்டன. புயலின் வேகம் அதிகமாக ஆக உன் தகப்பனார் நிலைகொள்ளாமல் தவித்தார். பண்ணையைச் சரிவரக் கவனிக்க ராமுவும் இல்லாததுதான் அவர் தவிப்புக்குக் காரணம். தானே எப்படியாவது எழுந்து போய் எல்லாவற்றையும் பார்த்து வருவது என்று துடிப்புடனிருந்த அவருக்கு நான் தூக்க மருந்து கொடுக்க வேண்டியதாக இருந்தது. அந்த நிலையில் உன் அப்பா எழுந்து நடமாடக் கூடாது என்பது டாக்டரின் உத்தரவு. ஆகவே டாக்டரின் யோசனைப்படி உன் அப்பாவுக்கு மயக்க மருந்து கொடுத்தேன். மருந்து தன் வேலையைச் செய்யும் வரை அவரைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு இருந்தேன். அப்போதுதான் உன் சித்தி வந்தாள். தான் கவனித்துக் கொள்வதாகக் கூறி என்னை அனுப்பி

விட்டாள். நான் ஆகாரத்தை முடித்துக்கொண்டு உன் அப்பாவின் அறைக்குக் கிளம்பும்போது எதிர்ப்பட்ட சித்தி, உன் அப்பா அயர்ந்து தூங்குவதாகக் கூறி, 'அங்கு போக வேண்டியதில்லை. நீ உன் அறைக்குப் போய் ஒய்வு எடுத்துக் கொள்' என்று சொன்னாள். அப்போது வெளியே புயல் உக்கிரமாக வீசிக் கொண்டிருந்தது. ராமு புயல் வலுக்குமுன் கரும்பூரிலிருந்து கிளம்பி விட்டான் என்பதையும் அறிந்துகொண்டேன். இப்போது நடு வழியில் இந்தக் கடும் புயலில் எங்கே சிக்கிக் கொண்டு எப்படி அவதிப்படுகிறாரோ என்ற சஞ்சலமும் தவிப்புமாக என் அறையில் உட்கார்ந்திருந்தேன்.

''இரவு வேளைகளில் கண் விழித்திருந்து உன் அப்பாவைக் கவனித்துக் கொள்வதற்காக எனக்கு ஒரு பெரிய பிளாஸ்கில் காப்பி அனுப்பி வைப்பார்கள். அநேகமாக நான் அதைக் குடிக்கவே மாட்டேன். இந்தத் தொழிலில் தூங்காமல் கண் விழித்து எனக்குப் பழக்கமாகிவிட்டது. ஆனால் அன்று புயலும் ராமுவைப் பற்றிய கவலையும் அந்தப் பிளாஸ்கை அடிக்கடி திறக்கும்படி செய்துவிட்டன. எந்த விநாடியும் ராமு வருவதை எதிர்பார்த்துக் காத்திருந்தேன். ஆனால் இப்போது நினைவுக்கு வருகிறது; அன்று அந்தக் காப்பி ஏதோ ஒருவிதமாக ருசியில் மாறுபட்டிருந்தது....''

''அப்படியானால் நீ குடித்த காப்பியில் ஏதோ கலக்கப்பட்டிருக்க வேண்டும் என்று சந்தேகிக்கிறாயா நிர்மலா?'' என்றாள் மஞ்சுளா.

''என் காப்பியில் யார் எதற்காக மயக்க மருந்து கலக்க வேண்டும் என்பதுதான் எனக்குப் புரியவில்லை, மஞ்சுளா. ஆனால் இன்றும் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அன்று எனக்கு ஏனோ விபரீதமாகத் தூக்கம் கண்களைச் சுழற்றிச் சொக்க வைத்தது. ஆகவே, அதற்குப் போக்குக் காட்ட உன் அப்பாவின் அறைக்குப் போனேன். இரவில் இடையிடையே அவர் அறைக்குப் போவது வழக்கம். அங்கு போனபோது உன் சித்தி அருகில் இருந்தாள். உன் அப்பா அமைதியின்றி முனகுவதாகச் சொன்னாள். என் கண்களில் தூக்கத்தைக் கண்டுதானோ என்னவோ உன் அப்பாவைத் தானே கவனித்துக் கொள்ளுவதாகவும் என்னை ஓய்வெடுத்துக் கொள்ளும்படியும் கூறினாள் உன் சித்தி. அன்று நான் இருந்த நிலையில் அதை மறுத்துக் கூறவில்லை. என் அறைக்குச் சென்றவள் அப்படியே படுக்கையில் போய்ச் சாய்ந்தேன். அப்படியொரு தூக்கம் எனக்கு என்றுமே வந்ததில்லை. தூக்கம் என்னை ஆட்கொண்டிருந்த போது புயல் உச்ச நிலையை அடைந்திருக்க வேண்டும்.''

சிறிது நேரம் நிர்மலா மௌனமாக எங்கோ பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு, ''நான் நல்ல ஆழ்ந்த உறக்கத்தில் மூழ்கியிருந்திருக்க வேண்டும். எத்தனை நேரம் தூங்கினேனோ எனக்குத் தெரியாது. ராமு வந்தபோதும் நான் தூங்கிக் கொண்டிருந்திருக்க வேண்டும். அவர் திரும்பி விட்டதாக ஒரு நினைவு. நினைவா? அது கனவாகவும் இருக்கலாம். கனவு போல.... நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. ஆனால் அவர் என் அறைக்குள் வந்ததாகத்தான் இன்றும் உறுதியாகக் கூறுகிறேன்.....'' என்றாள்.

''அப்படியானால் நீ அப்போது எழுந்திருக்கவில்லையா? உன் தூக்கம் கலையவேயில்லையா?'' என்று கேட்டாள்.

''இல்லையே! அதனால்தானே அதைக் கனவோ என்று சொல்லுகிறேன்..... சொப்பனாவஸ்தை என்று கேள்விப்பட்டிருப்பாயே, அப்படியொரு நிலை.... தூங்கியும் தூங்காத, விழித்தும் விழிக்காத ஒரு நிலை. என்னைச் சுற்றி ஏதோ நடப்பதை உணர முடிந்தது. ஆனால் என்ன என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. இருந்தாலும் ராமு என் முகத்துக்கு நேரே குனிந்து என் தோள்களைப் பற்றி உலுக்கி ஏதோ என்னைக் கேட்டதாக மட்டும் நினைவிருக்கிறது. 'நிர்மலா நிர்மலா! எழுந்திரு. இது என்ன தூக்கம்?' என்று கூறுகிறார். என்னால் எழுந்திருக்க முடியவில்லை. எனக்கு விழிப்பு ஏற்படவில்லை.

''பிறகு அவர் என் அறையை விட்டு எங்கோ போனார் என்று எண்ணுகிறேன். சிறிது நேரம் கழித்து அவர் மறுபடியும் என் அறையினுள் வந்தார். முன் போலவே என்னைக் குலுக்கி எழுப்பிக் கேட்டார். கேட்டதாகத்தான் நினைக்கிறேன். 'இங்கு என்ன நடந்தது? முதலாளி எங்கே காணோமே. நீ ஏன் அவர் அறையில் இல்லை?'''

''முதலாளி என்று ராமு குறிப்பிட்டது என் தாத்தாவையா அல்லது அப்பாவையா, நிர்மலா?'' என்று கேட்டாள் மஞ்சு.

''தெரியவில்லை, மஞ்சுளா. அவர் கேட்டது இந்தக் கேள்வியைத்தானா என்றுகூட என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை'' என்றாள் நிர்மலா, தன் கண்களை மூடி நெற்றிப் பொட்டை அழுத்திக் கொண்டே.

(தொடரும்)

# துள்ளும் குழந்தைகள் நன்கு வளர்ந்திட
# ருசித்துப் பருகட்டும் போர்ன்விடா!

ஓடி விளையாடும் குழந்தைகள்
உணவிலிருந்து பெறும் சக்தியை
பள்ளியிலும் விளையாட்டிலும்
வெகுவாக இழந்து விடுகின்றனர்.
அவர்களுக்கு தேவையான
இச்சக்தியை போர்ன்விடா
அளிக்கிறது. கோகோ, பால்,
மால்ட், சர்க்கரை இவை
இனிதே சேர்ந்த போர்ன்விடா,
ஒரு காட்பரிஸ் தயாரிப்பு.




**சக்திக்கும் வலிமைக்கும் —**
**மற்றும் தீஞ்சுவைக்கும் காட்பரிஸ் போர்ன்விடா!**

B/4664 TAM




5-5-71 தேவன் அமரரான தினம்.

"ஏ. ஜி. கார்டினர் என்று ஓர் ஆங்கில ஆசிரியர் இருக்கிறார். ஹாஸ்யம் என்றால் இவருடைய ஹாஸ்யம்தான் எனக்குப் பிடிக்கும். வாழைப் பழத் தோலில் வழுக்கி விழும் ஹாஸ்யம் இவருக்குத் தெரியாது; சூட்சுமமாயும் வாழ்வின் நுட்பத்தைப் பிரிப்பாயும் தத்துவ தரிசனம் கலந்ததாயும் உள்ள ஓர் உன்னத ஹாஸ்யம் இவருடையது" என்று திரு தி. ஜ. ர. ஹாஸ்யத்தைப் பற்றி ஒரு கட்டுரையில் குறிப்பிடுகிறார். அப்பேர்ப்பட்ட உன்னத ஹாஸ்யத்துக்கு — நினைத்து நினைத்துச் சிரித்து மகிழும்படியான ஹாஸ்யத்துக்குத் தமிழில் 'கல்கி'க்கு அடுத்தபடி



யாக, காலஞ்சென்ற ஸ்ரீதேவனைக் குறிப்பிட்டாக வேண்டும். சிறுகதையாகட்டும், நாவலாகட்டும், கட்டுரையாகட்டும் — ஹாஸ்யம் இல்லாமல் இவர் எழுதினதே கிடையாது.

தேவன், உரையாடல்களை ஹாஸ்யம் மிளிரும்படி எழுதுவதில் அசகாய சூரர். சிறிது கூடச் செயற்கை அம்சம் இன்றி — 'ஸ்பான்டேனியஸ்' என்று ஆங்கிலத்தில் சொல்வார்களே அத்தகைய இயற்கையாகப் பிறிடும் ஹாஸ்யம் அவருடையது.

உதாரணமாக —

"நமக்கு ஒரு வாட்ச்மன் வேண்டியதுதானே?"

"ஆஹா! இங்கே இனிமே சிமிட்டி, மரம், இரும்பெல்லாம் வந்து இறங்கும்..... பாருங்கோ, அதோ அங்கே ஒரு வீட்டில் ஜன்னல் வைத்தார்கள்! காலையில் வந்து பார்த்தால் அதைக் காணோம்! யாரைக் கேட்கிறது?"

"வாஸ்தவம்! வாட்ச்மன் என்று இருந்தால் அவனையாவது நாம் கேட்கலாம், அல்லவா?"

(ராஜத்தின் மனோரதம்)

"எங்கே, உமக்கு மூட்டை இட்டை ஒன்றும் கிடையாதா?"

"எல்லாம் ஸந்தானம் அய்யங்கார் கொண்டு போய் விட்டார் காரில்."

"அவர் கெட்டிக்காரர். புல்லுக் கட்டு முன்னாடி போனால் மாடு தானே தேடிக் கொண்டு வீடு வந்து சேராதா?"

(மிஸ்டர் வேதாந்தம்)

ஒரு சமயம், கோமதி சற்று முன்னால் வேகமாகப் போகவே பாலு, ரங்கராஜனை, "மாமா! வண்டியை நிறுத்த சங்கிலியைப் பிடித்து இழு!" என்றான். ரங்கராஜன் சிரித்துவிட்டு, கோமதியின் சங்கிலியைத் தொடப் போன சமயம், "அகாரணமாய் அபாயமெடுப்பவர்களுக்கு ஐம்பது ரூபாய் அபராதம்!" என்றாள்.

(கோமதியின் காதலன்)

அபூர்வமாகக் கலைவிட மங்களத்தை எதிர்த்து





வாயாடி விட்டு, அவள் அதைத் தெரிந்து கொண்டு விடுவாளோ என்று பகலெல்லாம் நடுங்கிக் கொண்டிருப்பான் ஜகதீசன். (மிஸ் ஜானகி)

"அப்! உனக்கு அடுத்தடுத்து இரண்டு பெரிய கண்டங்கள் இருக்க வேண்டும். விதி ரேகைகளில் ரெண்டு வெட்டு விழுந்திருக்கிறது, பாரும்!" என்றார். ஒரு கண்டம் மாடியிலிருந்து விழுந்தது. இன்னொரு கண்டம் டாக்டர் கிருஷ்ணனிடமிருந்து மீண்டது என்பதாக ஆஸ்பத்திரிச் சிப்பந்திகள் பேசிக் கொண்டதாக வதந்தி.

(கல்யாணி)



மேலே குறிப்பிட்டவை எல்லாம், தேவனின் ஹாஸ்யத்தில் ஒரு சில தேன் துளிகள் தாம். கதாபாத்திரங்களை மறக்க முடியாமல் சிருஷ்டி செய்வதிலோ, கதாபாத்திரங்கள் மூலம் நகைச்சுவை எழுப்புவதிலோ அவர் அசகாய சூரர்!

ஒன்று ஞாபகம் வருகிறது. தபால் தந்தி இலாகாவினர் ஓர் ஆங்கில விளம்பரத்தில் 'யுவர் போஸ்ட்மேன் இஸ் நாட் ஏ ஷெர்லாக் ஹோம்ஸ்' என்று குறிப்பிட்டு விலாசங்களைத் தெளிவாகவும் முழுமையாகவும் எழுதும்படி வேண்டுகோள் வெளியிட்டிருந்தார்கள். அதன் தமிழ் விளம்பரத்தை நான் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். என்னுடைய மகிழ்ச்சியும் ஆச்சரியமும் இல்லை, அந்தத் தமிழ் விளம்பரத்தில், "உங்கள் தபால்காரர் ஒரு துப்பறியும் சாம்பு அல்ல!" என்று வெளியிட்டிருந்தார்கள், தபால் தந்தி இலாகாவினர்.

தேவனின் பெருமைக்கும் அவருடைய கதாபாத்திரங்களின் சிரஞ்சீவித்துவத்துக்கும் வேறென்ன சான்று வேண்டும்?

-- வாதூலன்

நாடகத்தில் வருவோர்:

| | |
|---|---|
| அகோரம் : | குடும்பத் தலைவர் |
| துரைசாமி : | வீட்டு வேலையாள் |
| பசுபதி : | அகோரத்தின் மகன் |
| சரவணன் : | கிளார்க் |
| மற்றும், | முனிசிபல் சேர்மன் |
| | சர்க்கஸ் மானேஜர் |
| | முனிசிபல் கமிஷனர் |

(தூரத்தில் மண்வெட்டியால் வெட்டும் சத்தம்.)

அகோரம்: துரைசாமி... துரைசாமி... எங்கே போயிட்டான்? இந்த வீட்டிலே ஒரு அஞ்சு நிமிஷம் நிம்மதியாப் படுத்தோம்னு கிடையாது. அடே, துரைசாமி... (இரைந்து) துரைசாமி.....!

துரைசாமி: என்னங்க?

அகோரம்: ஏண்டா, எங்கே தொலைஞ்சு போயிட்டே? இதோ பார்... இந்தச் சத்தம் உன் காதிலே விழலே? என்னத்துக்கு இந்தலே சத்தம்?

துரை: சர்க்கஸ் கொட்டகையிலே ஒரு யானை தவறிப் போயிடுச்சுங்களாம்.. அதைப் புதைக்கிறதுக்குக் குழி வெட்டறாங்க அவுங்க.

அகோ: என்ன, யானையா செத்துப் போயிடுத்து? இங்கேயா புதைக்கப் போறான்?

துரை (சிரிப்புடன்): பின்னே என்னங்க, யானையை இடுகாட்டுக்கா தூக்கிக்கிட்டுப் போவாங்க?

அகோ: அடே, அதிகப்பிரசங்கி, குறுக்கே பேசறயா? இவன், பசுபதி, எங்கே தொலைஞ்சு போயிட்டான்?

துரை: சின்ன ஐயா தூங்கறாங்க..

அகோ: நன்றாத் தூங்கறான், பட்டப் பகலிலே.... உருப்பட்டாப்பிலேதான்.

(பசுபதி வந்துகொண்டே)

பசுபதி: என்னப்பா, கூப்பிட்டேளா?...

அகோ: என்னப்பாவா? பிரளயமே வந்துட்டாப்பிலே அடுத்த கொல்லையிலேருந்து அரை மணியா சத்தம் கேக்கறது? இந்த இரைச்சலிலே, உனக்கு எப்படித் தூக்கம் வந்ததோ?

பசுபதி: இல்லேப்பா, அவுங்க யானை ஒண்ணு, ராத்திரி செத்துப் போயிடுத்தாம். அதைப் புதைக்கக் குழி வெட்டிக்கிட்டிருக்காங்க போலிருக்கு.

அகோரம் (கோபத்துடன்): ஏண்டா... உன்னை பி. எல். வாசிக்க வைச்சேனே, நல்ல பயன்தான். அவன் யானையைப் புதைக்கறான்னு ரொம்ப நிதானமா, சமாசாரம் சொல்ல வந்துட்டியே!

பசு: என்னப்பா, யானையைப் புதைக்காமே தகனம் பண்ணுவானா? இல்லாட்டா நாலு பேர் கட்டித் தூக்கிண்டு போவானா?

துரை: கேளுங்க, நல்லாக் கேளுங்க. நானும் அதைத்தானுங்க கேட்டேன்.

அகோ: டேய்! நீ வாயைத் திறந்தே, கேட்டை விட்டு வெளியே போக வேண்டியது தான். சரி, பசுபதி! நீ முதல்லே போய் அந்த சர்க்கஸ் மானேஜரை நான் பார்க்கணும்னு அழைச்சிண்டு வா, நான் அவர்கிட்டே பேசிக்கிறேன். ஹூம்... உன்னைச் சொல்லி என்ன பிரயோசனம்? எது தன்னுடைய உரிமை, எது இல்லேன்னு தெரிஞ்சுக்க அவன் இருந்தாத்தானே மனுஷனுக்கு? ஏன் நிக்கறே... அவனை உடனே கையோட அழைச்சுண்டு வா.

(காட்சி மாற்றம்)

சர்க்கஸ் மானேஜர்: நமஸ்காரம் சார்... கூப்பிட்டீங்களாமே?

அகோ: அப்படியே உட்காருமய்யா..

சர். மானேஜர் (தயக்கத்துடன்): என்னங்க?...

அகோ : செத்த யானையை, உம்ம பேராப் போட்டிருக்கிற இடத்திலேயே புதைக்கக்கூடாது. அப்படிச் செஞ்சா நான் சட்டப்படி நடவடிக்கை எடுத்துப்பேன். ஜாக்கிரதை. உடனே யானை காரியமா என்ன செய்யலாம்னு யோசியும்.

சர். மா.: இது என்னங்க, பெரிசா "பாம்" போடறீங்களே? செத்த யானையை

# —இறந்தாலும் ஆயிரம் பொன்

## •சியாமா•



டேராப் போட்டிருக்கிற இடத்திலே புதைக் காமே வேறே என்னங்க பண்ண முடியும்?

அகோ: அதைப் பற்றி எனக்குக் கவலே யில்லே. டவுன் எல்லேக்குள்ளே புதைக் கிறது சட்டப்படி குற்றம். நான் அதுக்குச் சம்மதிக்க மாட்டேன். நீர் நாளேக்கு டேராவைக் கிளப்பிக்கிட்டுப் போயிடுவீர். சாஸ்வதமா இருப்பது இங்கே நான்தாங்கறது நினைவிருக்கட்டும்.

சர். மா. (அதிர்ந்து): நான் என்னங்க செய்யறது?

அகோ: அதைத் திருப்பித் திருப்பிச் சொல்லிப் பிரயோசனமில்லே. டேய், துரைசாமி! ஐயாவை வாசலண்டை கொண்டு போய் விட்டுட்டு வா. சரி...மிஸ்டர், குட் பை.

(சிறு தாமதம்)

(தொடர்ந்து மண்வெட்டியால் வெட்டும் சத்தம்)

அகோ: பசுபதி...உனக்குக் கேக்கறதாடா? இந்தப் பசங்க வெட்டறதை நிறுத்தல்லே போலிருக்கே.

துரை: அவன் போறபோது ஒன்றும் நிறுத்தறதாச் சொல்லலிங்க.

அகோ: சரி, சரி. மயிலே மயிலே இறகு போடுன்னுப் போடுமா? பசுபதி, நீ போய்க் கோட்டையும் தலைப்பாகையையும் எடுத்து வா. நான் நகரசபைக்குப் போய் கமிஷனரைப் பார்த்துட்டு வர்றேன்.

(காட்சி மாற்றம்)

முனிசிபல் கமிஷனர்: வாங்க, வாங்க... மிஸ்டர் அகோரமா? என்ன ரொம்ப அபூர்வமாக இருக்கே! நிக்கறீங்களே, உட்காருங்க. என்ன சமாசாரம்?

அகோ: வேறே எதுக்கு நான் வரப் போறேன். உங்க தயவுலே ஒரு சர்க்கஸ் வந்திருக்கே, அடுத்த காம்பவுண்டிலே... இப்ப அவங்களுடைய செத்த யானையைப் புதைக்கவும் பர்மிஷன் கொடுத்தீங்க போலிருக்கு...

முனி. கமி.: இதென்ன, என்னமோ புதிர் போட்டுப் பேசறீங்க.

அகோ: நானு புதிர் போடறேன்?

முனி. கமி.: எனக்கு நீங்க என்ன சொல்றீங்கன்னே வெளங்கலே. கொஞ்சம் பொறுங்க. நான் நேத்திக்கு ஆபீசுக்கு வரல்லே; இப்பத்தான் வந்தேன். கன்ஸர்ன்டு கிளார்க்கைக் கூப்பிட்டுக் கேட்கிறேன்.

(மணி அடிக்கிறார்)

முனி. கமி.: (வந்த பியூனிடம்): நீ போய் லைசென்ஸ் கிளார்க் சரவணத்தை வரச்சொல்!

(தாமதம்)

என்னப்பா சரவணம், மிஸ்டர் அகோரத்துடைய காம்பவுண்டுக்கு அடுத்த காம்பவுண்டுலே இருந்த சர்க்கஸ் யானே செத்துப் போயிடுத்தாம். அதை அங்கேயே புதைக்க, அவங்க ஏற்பாடு செய்யறாங்களாமே! இதுக்கு யார் பர்மிஷன் கொடுத்தது?

சரவணன்: மன்னிக்கணும் சார்....ஆபீஸ் திறந்த உடனேயே அந்த சர்க்கஸ் மானேஜர் சேர்மனிடமிருந்து அவசரம்னு போட்டு உடனே பர்மிஷன் கொடுக்கும்படி ஒரு கடிதாக கொண்டுவந்தான். நீங்க ஆபீஸ் வரும் விவரம் நிச்சயமாத் தெரியலே. நான் சரின்னு சொல்லி அவனே அனுப்பிவிட்டு, வேணுங்கற பேப்பர்களைத் தயார் பண்ணிக்கிட்டு வந்தேன். இதோ 'புட்டப்' பண்ணறேன் சார்.



முனி. கமி.: ரொம்ப லட்சணமா யிருக்கு.. அவர் கடிதாசு கொடுத்தார்... நீ பர்மிஷன் கொடுத்தாயாக்கும்?...

(சேர்மன் வருகிறார்)

சேர்மன் (வந்துகொண்டே): என்ன கமிஷனர் சார், கோபமா இருக்காப்பலே இருக்கு! விஷயம் என்னவோ ?

முனி. கமி. உங்களுக்கு நூறு வயசு சார். உங்களைப் பத்தித்தான் பேசிக்கிட்டிருந்தோம்! நீங்களே வந்துட்டீங்க.

சேர்மன்: என்னைப் பத்தி என்ன பேச்சுங்க? ஓ...! மிஸ்டர் அகோரமா? சௌக்கியம் தானே?

அகோ: கடவுள் புண்ணியத்திலே.

முனி. கமி.: இந்தச் சர்க்கஸ் யானையைப் புதைக்க 'பர்மிஷன்' கொடுக்கும்படி நீங்க எழுதி அனுப்பிச்சிங்களாம். நம்ப கிளார்க் 'ஆகட்டும்னு' அவனை அனுப்பி விட்டான். மிஸ்டர் அகோரம்தான் அதை ஆட்சேபனை செய்யறார்.

சேர்மன்: உங்களுக்கு என்னங்க ஆட்சேபனை? அவன் பாவம், வேறே என்னங்க செய்வான்?

அகோ: சேர்மன் சார்! உங்க கேள்வியே எனக்குப் புரியல்லே. எனக்கு என்ன ஆட்சேபணையா?அதைப் புதைக்கப்போற இடம் என் பக்கத்து காம்பவுண்டு.

சேர்மன்: தெரியுங்க...

அகோ: நாலு நாட்களுக்குப் பிறகு அது 'டீகம்போஸ்' ஆனால், என்னைத்தான் முதலில் அது பாதிக்கும்...

சேர்மன்: புதைச்சப்பறம் அது எப்படிங்க உங்களைப் பாதிக்கும்?

அகோ: அது என்ன சாதாரண ஜந்துவா, கெட்டுப் போக ஆரம்பிச்சால் ஜலம் வர்ற ஊற்றுகளெல்லாமே தொலைஞ்சு போயிடுமே! அந்த வட்டாரத்துக்கே அதனாலே கெடுதல் வரும் சார்.

சேர்மன்: நீங்க சும்மா 'காபரா' படறீங்க, சார். அதை எங்கேயானும் ஒரு இடத்துலே புதைக்கத்தானே ஆகணும்? அவனென்ன, பாடை கட்டித் தூக்கிக்கிட்டுப் போவானுங்களா? நீங்களே சொல்லுங்க.

அகோ. (ஆத்திரமாக): அவன் அதை எப்படிக் கட்டித் தூக்கிட்டுப் போறாங்கறதைப் பத்தி எனக்கு அக்கறை இல்லே. அதை அவன் அந்த இடத்திலே புதைச்சான்னு அது சட்டப்படி குத்தம். அதை அனுமதிச்ச நீங்களும் உடந்தைக் குற்றவாளி ஆவீங்க. நான் சொல்லிப்பிட்டேன்.

சேர்மன்: அடேடே....பயமுறுத்தறீங்களே? நான்தான் அனுமதிச்சேன். இப்போ என்ன செய்யப் போறீங்க?

அகோ: என்ன பண்ணப்போறேனு நாளைக்குப் பத்தரை மணிக்கு ஜில்லா கோர்ட்டிலே இன்ஜங்ஷனுக்கு மனுக் கொடுக்கப் போறேன். நீங்களுந்தான் பார்ட்டி—அங்கே வந்து இந்தப் பதிலைச் சொல்லுங்க பார்க்கலாம்.

முனி. கமி.: சேச்சே! கோபப்படறீங்களே. மிஸ்டர் அகோரம், சேர்மன் சார், உங்களைக் கிண்டல் பண்ணின்னு பேசுறார். இப்போ எங்களை என்ன பண்ணச் சொல்றீங்க? அவன் கிடக்கிறான். சர்க்கஸ்காரன். நாளைக்கு டேராவைக் கிளப்பிக் கொண்டு ஊரை விட்டே போயிடுவான். உங்க தயவு எங்களுக்கு எப்பவும் வேணும். என்ன சேர்மன் சார்?

சேர்மன்: நான் என்னத்தைச் சொல்றது. அவர் கச்சேரிக்குன்னு வரச் சொல்றார்!

அகோ: பின்னே, நான் விளையாட்டுக்காகவா இந்தக் காயற வெய்யல்லே இங்கே வந்தேன்? உங்களுக்குச் சந்தேகம்னா இது விஷயமா ஓர் அமெரிக்க அதாரிட்டி கூட இருக்கு. இப்படித்தான் என்னைப்போல ஒரு தனி மனுஷன் வழக்குப் போட்டு முனிசிபாலிடிக்கு எதிரா, அதிக நஷ்ட ஈடு வாங்கியிருக்கார்.

முனி. கமி.: அது என்னங்க, யானையா?

அகோ: அங்கே செத்தது காண்டாமிருகம்! அது ஒரு மிருகக் காட்சி சாலையைச் சேர்ந்தது. பக்கத்து நிலத்துச் சொந்தக்காரன் கம்பிளெயிண்ட் கொடுத்தான். நஷ்ட ஈடு என்ன தெரியுமா?

சேர்மன்: எனக்கு என்னங்க தெரியும்?

அகோ: ஐயாயிரம் டாலர்.

சேர்மன்: அதெல்லாம் எதுக்குங்க. கமிஷனர் சொல்றுப்பிலே, நீங்க ஆயிரம் காலத்து மனுஷங்க. உங்களை விடவா அந்த சர்க்கஸ்காரன்? கமிஷனர் சார், சைக்கிள் பியூன்கிட்டே அவசரமா ஒரு ஆர்டர் கொடுத்தனுப்புங்க. மிஸ்டர் அகோரம், திருப்திதானே?

அகோ: நியாயமா நடந்தால், திருப்திக்கு என்ன குறைச்சல் சார்?

சரவணன்: சார்... அவன் எப்படி சார், அதைக் கட்டித் தூக்கிக்கொண்டு போவான்?

முனி. கமி.: உனக்கு எதுக்கப்பா இந்த வம்பெல்லாம்? நாம்ப ஆர்டரைப் போட்டாம் அவன் பாடு, யானை பாடு... நீ போய் ஷார்ட்ஹாண்ட் டைப்பிஸ்டை வரச் சொல்லு. என்ன மிஸ்டர் அகோரம், உங்க புரோகிராம் என்ன?

அகோ: வீட்டுக்குத்தான் போகணும். உங்ககிட்டேயிருந்து, ஆர்டரை வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போய் அவன் பேரிலே சார்ஜ் பண்ணிட்டா என் தொல்லை முடிஞ்சது. சரி, உங்களை 'ட்ராப்' பண்ணணுமா?

சேர்மன்: பாத்தீங்களா. இன்னும் அவுங்களுக்கு நம்மகிட்டே நம்பிக்கை யில்லே.

அகோ: அதெல்லாம் ஒண்ணுமில்லே. அவன் காலையிலேருந்து குழி வெட்டிக்கிட்டிருக்கான். ஒருவேளை உங்க பியூன் போறதுக்குள்ளே அதைக் குழியிலே போட்டு மூடிட்டான்னு வீண் வம்புதானே?

முனி. கமி.: சரி, உங்க இஷ்டம். நானும் உங்களோட வர்றேன். அங்கே என்னதான் நடக்குதுன்னு வேடிக்கை பார்க்கலாமே, சர்க்கஸ் வந்து ஒரு மாசமாச்சு, நான் அந்தப் பக்கம் இன்னும் போகல்லே.

(காட்சி மாற்றம் - மிருகங்களின் ஆரவார பின்னணியின் சத்தம்)

முனி. கமி.: என்ன சார், நாம்ப சர்க்கஸ் கொட்டகைக்குப் போறதாகவல்லவா கிளம்

# உங்கள் குழந்தை பள்ளி செல்கின்றதா? வெற்றிகரமான வாழ்வைத் தெம்புடன் தொடங்க ஃபெர்ராடால் கொடுங்கள்

உங்கள் செல்வன் பிள்ளைப் பிராயத்தில், படிப்பிலும் விளையாட்டிலும் சிறந்து விளங்க அதிக சக்தி மற்றும் அதிக ஆற்றல் பெற்றிருக்கவேண்டும்.

அந்த அனைத்தையும் அளிப்பது ஃபெர்ராடால் ஒன்றுதான். இதனால், சரியான விகிதத்தில் இரும்புச் சத்து, விடமின்கள் மற்றும் தாதுச் சத்துக்கள் உங்கள் செல்வனுக்குக் கிடைக்கின்றன.

ஃபெர்ராடாலில் உள்ள சத்துக்கள் உங்கள் செல்வனின் உடல் உறுப்புகள் ஆக்கம் பெற்று ஆரோக்கியமுடன் வளர மிகமிக அவசியமானவை.

உங்கள் குழந்தைக்குக் காலையிலும், இரவிலும், நேரடியாக பாட்டிலிலிருந்தோ அல்லது பாலுடன் கலந்தோ, ஃபெர்ராடால் கொடுங்கள்.

நினைவிருக்கட்டும், குடும்பம் முழுமைக்கும் குறையாத ஆரோக்கியம் தருவது ஃபெர்ராடால்.






## ஃபெர்ராடால்®

**சுவையில் சிறந்தது— குடும்பம் முழுமைக்கும் குறையாத ஆரோக்கியத்திற்கு**

பார்க்-டேவிஸ் தயாரிப்பு

® ரெஜிஸ்டர்டு ட்ரேட்மார்க்,
ரெஜிஸ்டர்டு யூஸர்: பார்க்-டேவிஸ் (இந்தியா) லிமிடெட், பம்பாய்-72 ஏ.எஸ்.

JAISONS-418

## சஷ்டியப்தபூர்த்தி



பம்பாய், தொத்து நோய் தடுப்பு ஸ்தாபனத்தின் (ஓய்வுபெற்ற ஆபீஸ் சூபரின்டென்டண்ட்) ஸ்ரீ ஜி எஸ். மணியம் அவர்களது சஷ்டியப்த பூர்த்தி விழா 30-3-71 செவ்வாய் கிழமை சென்னை தியாகராயநகர் ருக்மணி கல்யாண நிலைய தில் சிறப்பாக நடைபெற்றது. மேற்படி விழாவுக்கு ஏராளமான உறவினர் களும், நண்பர்களும், பிரமுகர்களும் வருகை தந்து சிறப்பித்தனர்.

பிறேனும். காரை நேரே வீட்டுக்கே கொண்டாந்துட்டீங்களே.

அகோ: நாம்ப எதுக்காக சார் அவன்கிட்டே போயி நிக்கணும்? அந்த மானேஜரையே இங்கே வரவழைச்சாப் போச்சு.. (இரைந்து) ஏ... துரைசாமி, நீ போய் கமிஷனர் ஐயா வந்திருக்கார்னு சொல்லி அந்த சர்க்கஸ் மானேஜரை இங்கே அழைச்சுக்கிட்டு வா..என்ன சார், ஏதானும் காப்பி, டிபன்...

முனி. கமி.: அதெல்லாம் ஒண்ணும் வேண்டாங்க. இந்த வேளையிலே சாப்பிட்டா என்னே 'அப்ஸெட்' பண்ணிடும். (மாறிய குரலில்) உங்களுக்கு இங்கே சிரமந்தான். ராப்பகலா மிருகங்களுடைய சத்தமும் வந்து போகிற மனுஷாளோட கூச்சலும் கேட்டுக்கிட்டே இருக்கும் போலிருக்கே.

அகோ: இப்போ தெரியுதுங்களா, ஏழை வார்த்தை எங்கே அம்பலத்துக்கு ஏறுகிறது: அவன் யாரையோ பார்க்கிறான். நீங்களும் லைஸென்ஸ் கொடுத்திடறீங்க...தாட்சிண்யம்.

முனி. கமி.: உலகமே தாட்சிண்யத்திலே தானே நடக்குது.

சர்க்கஸ் மானேஜர்: கும்பிடறேனுங்க, எசமான். கூப்பிட்டீங்களாமே?

முனி. கமி.: என்னப்பா, ஐயா ரொம்பக் கோபிக்கிறாங்களே. நீ வந்ததிலேருந்து ஒரே சத்தமும் கூச்சலும்தானாம். யானையைப் புதைக்கக் குழி வேறே வெட்டிண்டு இருக்கிறியாம்.

சர். மா.: என்ன பண்ணுவேனுங்க ஏழை. பெரிய ஐயாவைப் பார்த்து உத்தரவு வாங்கினேனுங்க, அதை அடக்கம் செய்ய...

முனி. கமி.: அது இப்ப செல்லாது அப்பா! இந்த ஐயா பெரிய வக்கீல்... சட்டமெல்லாம் படிச்சவங்க. ஊருக்குள்ளே யானையைப் புதைக்கக்கூடாதுன்னு சட்டம் இருக்காம்.

சர். மா.: ஐயோ... எசமான், வயித்துலே அடிச்சுப்பிடாதீங்க. நான் ஏழை. செத்த யானையை வைச்சுக்கிட்டு நான் என்னங்க செய்வேன்?

முனி. கமி.: நான் என்னப்பா செய்வேன்? உன்பாடு, வக்கீல் ஐயா பாடு... நான் இப்போ உனக்கு உத்தரவு கொடுத்தால் நாளைக்குப் பத்தரை மணிக்குக் கச்சேரியிலே மனுப் போட்டு உன்னோடு என்னையும் சேர்த்துச் சந்திக்கு இழுத்துடுவார்.

சர். மா.: ஐயா எசமான், கும்பிடறேனுங்க. நீங்க பெரிய மனசு வைக்கணும். டேராவிலே பிணம் கிடக்குதுன்னு காலேயிலேருந்து ஒரு துளிக்கூடத் தண்ணி உள்ளே போகலீங்க. பொழுது வேறே போயிடுத்துங்க. நான் இனிமே அதை எங்கே தூக்கிக்கிட்டுப் போவேன்?...

அகோ: ஓய்...இதெல்லாம் பேசிப் பயனில்லே. அதை இங்கே புதைச்சா ஊருக்கே கெடுதல். விஷயமே தெரியாமே... உளறிக்கிட்டே போறியே... நான்தான் இந்தக் காரியம் செய்யக் கூடாதுன்னு பன்னிரண்டு மணிக்கே சொன்னேனே!

துரை: அதை நெருப்புப் போட்டுத் தகனம் பண்ணிட்டா என்னங்க...?

அகோ: அதிகப்பிரசங்கி...

சர். மா.: அதெப்படி தம்பி முடியும்?

முனி.கமி.: அப்போ என்னப்பா சொல்றே.

சர். மா.: நான் என்ன செய்யறதுங்க? நீங்களே சொல்லுங்க.

அகோ: நீ என்ன வேணும்னாலும் செய். ஆனா ஒண்ணு. யானையை அடுத்த காம்பவுண்டுலே தகனம்பண்ணினா, நாங்க ஊரையே காலி பண்ணிண்டு போகவேண்டியதுதான்.

சர். மா.: அது என்னத்துக்கு, அர்த்தமில்லாத பேச்சு, நடக்கக் கூடியதுங்களா!

முனி. கமி.: சரி, குழியைத் தூத்துட்டு, மேற்கொண்டு நடக்க வேண்டியதைப் பாரு. இந்தா ஆர்டர்...

சர். மா.: ஐயோ கடவுளே! இவுங்க பேச்சைக் கேட்டுக்கிட்டு வயித்துலே அடிச்சுப்புட்டீங்களே. நான் என்ன பண்ணுறதுங்க?

முனி. கமி.: ஏனப்பா வீணா கவலைப்படறே? கோவில் சப்பரத்திலே தூக்கிப் போட்டு உன்னுடைய பாக்கி யானைகளை விட்டு இழுத்துக்கிட்டுப் போகலாமே.

சர். மா.: என்னங்க, நீங்க பெரிய மனசு வைக்க மாட்டேங்கிறீங்க. கோவில் சப்பரத்தை அவுங்க மட்டும் கொடுப்பாங்களா? குட்டிச்சுவரு மேலேதான் நான் மோதிக்கிடணும்.

முனி. கமி.: இதோ பார், நீ இங்கே அழுது அங்கலாய்க்கிறதுலே பிரயோஜனமில்லே. சட்டம் சட்டம்தான். வா, நானும் உன்னோடு வர்றேன். அங்கே போய் என்ன செய்யலாமுன்னு பார்ப்போம். ஏங்க மிஸ்டர் அகோரம், உத்தரவு வாங்கிக்கிட்டுமா?

(கமிஷனர் போகிறார்)

பசுபதி: பாவம், அவன் அதை எப்படித் தூக்கிண்டு போவானோ! அவன் பயப்படறாப்பிலே சப்பரம் கிடைக்கலேன்னு அவன் பாடு அதோகதிதான்.

அகோ: ரொம்பப் புத்திசாலி. அவன் என்ன செய்வான் என்கிறதுக்காக அழுவே போலிருக்கே; நம்ப உரிமையைப் பத்திக் கொஞ்சம் கூடக் கவலையைக் காணோம். அதை இங்கே அவன் புதைச்சா, நம்ப சொத்தோட மதிப்பு என்ன ஆகிறது?

(துரைசாமி சிரித்துக்கொண்டே வருகிறான்)

அகோ: டேய், உனக்கு எத்தனை தரம் சொல்றது, நாலு பேர் இருக்கறப்போ அசட்டுப் பிசட்டுன்னு பேசக் கூடாதுன்னு!

துரை: இல்லீங்க... எசமான், ஒரு வசனம் நினைப்புக்கு வந்திச்சு, சிரிப்புத் தாங்க முடியல்லே...

அகோ: என்னடா, அப்படிப்பட்ட வசனம்?

துரை: அதானுங்க, யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன்னுன்னு சொல்லுவாங்களே...

அகோ: அதுக்கு என்னடா இப்போ?—

துரை: அந்த சர்க்கஸ் மானேஜர், கமிஷனர்கிட்டே சொல்றான், ''இந்த யானை உயிரோட இருக்கிறபோது அவன் வரும்படியிலே பாதியைச் சாப்பிட்டுக்கிட்டுத்தான் இருந்திச்சாம். இப்போ இறந்த யானை, ஆளையே ஓட்டாண்டியாக்கிடப் போறதுன்னு அழுதுக்கிட்டுப் போறான். (சிரிக்கிறான்.)

அகோ: டேய்... உன்னை யார் இதையெல்லாம் கேட்டது? போய் வேலையைப் பார்.

(தொலைவில் மிருகங்களின் ஒலி, ஒரே ஆரவாரம்)

# பள்ளிகள் மூடின, இதயங்கள் துள்ளின!




குழந்தைகளுக்குப் பரீட்சைகள் முடிந்து விடுமுறை வந்தாகி விட்டது. இனி இரண்டு மாதங்களுக்கு ஒரே குதூகலம்தான். இதோ, பொழுது போக்காக நீங்கள் படித்து மகிழக்கூடிய சில நூல்கள். அப்பாவுக்கு அதிகமாய்த் தொந்தரவு தராமல் இவற்றில் ஒன்றோ இரண்டோ அவர் வசதிக்கேற்ப வாங்கிக் கொள்ளுங்கள்.

### 'வாண்டு மாமா' எழுதியவை:

குழந்தைகளுக்கிடையில் 'வாண்டு மாமா' என்ற பெயர் பிரசித்தம். **'விசித்திரக் குள்ளன்'** என்ற தலைப்பில் அவர் எழுதியுள்ள நூலை நாலு முதல் எட்டு வயது வரை உள்ள குழந்தைகள் ரொம்ப ரசிப்பார்கள். ஒரு தேங்காயை உடைத்தபோது வெளிப்பட்டு மூன்றடி உயரமே வளர்ந்தான் என்றாலும் இந்த விசித்திரக் குள்ளன் செய்யும் காரியங்கள் அசகாய சூரர்களாலும் சாதிக்க முடியாதவை. வீர தீரச் செயல்களால் குழந்தைகளின் கண்களை அகல விரியச் செய்யும் குள்ளன் விநோத வேடிக்கைகளால் அவர்களின் அதரங்களை மலரவும் வைப்பான். *(விலை: ரூ. 2.00.)*



ஹான்ஸ் கிறிஸ்டியன் ஆண்டர்ஸன் குழந்தை இலக்கிய மேதை என்று கருதப்படுகிறவர். டென்மார்க்காரர். அவரது "மெர்-மெய்ட்" என்ற கதையை **மீன் அழகி** என்ற தலைப்பில் தமிழாக்கித் தந்திருக்கிறார் வாண்டு மாமா. ஏதோ தொலை தூர நாட்டிலே நடக்கும் கதையாக இன்றித் தமிழகத்திலும் அதைச் சூழ்ந்த கடலிலும் நடக்கும் கதை போலவே சித்திரித்திருப்பதானது, குழந்தைகள் சுவாரசியம் குன்றாது படிக்க உதவும். ஓவியர் விஜுவின் படங்கள் நூலை அழகுபடுத்துகின்றன. *(விலை: ரூ. 2.00)*

கமலாவின் தாத்தா ஒரு விஞ்ஞானி. அவரது பரிசோதனைகளில் கிடைக்கும் அபூர்வ ரசாயனப் பொருள்கள் குரல்களை மாற்றும்; நடனமாட வைக்கும்; எடையைக் கூட்டும்; இன்னும் ஏதேதோ குளறுபடிகளைச் செய்யும்! இத்தகைய ரசாயனப் பொருள்களின் உதவியுடன் கமலா கள்ளிகளை அடக்குகிறாள், திருடர்களைப் பிடித்துக் கொடுக்கிறாள், இன்னும் ஏதேதோ ஜாலங்களைச் செய்கிறாள். **கமலாவும் கருப்பனும்** என்ற இந்தப் புத்தகத்தில் கருப்பன் கதை வேறு. துஷ்டனை அவனை ஒரு சாமியார் கடுவன் பூனையாகுமாறு சபித்து விடுகிறார். ஆனால் இந்தக் கடுவன் பூனை பேசுகிறது, நடக்கிறது, பூனை போலத் தாவவும் செய்கிறது. கருப்பனின் உருவம் தான் மாறியதே ஒழிய அவன் சேஷ்டைகள் குறையவில்லை. அட்டகாசம்தான் போங்கள்! விலை: ரூ. 1.50. மேற்படி மூன்று நூல்களும் கிடைக்குமிடம்: **வானதி பதிப்பகம், சென்னை—17.**

### கலைமகள் வெளியீடுகள்:

பத்துப் பன்னிரண்டு வயதுக் குழந்தைகள் கோவி. இளங்கோவனின் **'அப்பா எங்கே?'** என்ற நூலை ரொம்பவும் ரசிப்பார்கள். கண்ணன் பத்திரிகை தொடர்கதைப் போட்டியில் பரிசு பெற்ற, குழந்தைகள் நாவல். தர்மத்தைக் காக்க வந்த மர்மக் கதை. கல்லூரி மாணவிகள் பேசிக் கொள்வது இயல்பாகவும் வேடிக்கையாகவும் அமைந்து நகைப்பில் ஆழ்த்துவதான கதைப் போக்குக்கு ஊடேமுக்கவிட உதவுகிறது. *(விலை: ரூ. 1.25.)*



**'சிப்பாய் வருகிறார்!'** என்ற தலைப்பில் 'லெமன்' பல வேடிக்கைப் பாடல்களைத் தருகிறார். பிள்ளையாரிடம் ஆரம்



பித்து அனுமனிடம் முடியும் இத்தொகுப்பில் அட்டைக் கத்திச் சிப்பாயும் உண்டு. ஜலதோஷம் பிடித்த ராஜாவும் உண்டு. இன்னும் எத்தனையோ பல வேடிக்கையான கவிதை நாயகர்கள். 'ரெனாக்'கின் சித்திரங்களைப் பார்க்கும்போதே சிரிப்பு ஆரம்பமாகி விடும் என்றால் கவிதைகளைப் படிக்கையில் சிரிக்கக் கேட்பானேன்? ''அது சரி, தோகை விரித்தாடும் மயிலே, குயிலானது, 'அக்கா மயிலக்கா' என்று கூப்பிடுகிறதே, சரிதானா?'' என்று புத்தி சாதுரியம்மிக்க குழந்தைகள் கேட்கலாம். விலை: ரூ. 3.00.

விடுமுறையில் படிக்க நூல்கள் பற்றிச் சொல்லியாகி விட்டது. விளையாட?.... இருக்கிறதே, **'ஓடி விளையாடு பாப்பா'** என்ற அழகான, சுவையான நூல்!

பிறந்து சில மாதங்களிலேயே குழந்தை கால்களை உதைத்துக் கொண்டு விளையாட ஆரம்பிக்கிறது. அப்போது தொடங்கிப் பின்னால் மைதானத்தில் பந்தை உதைத்து விளையாடும் வரை எத்தனையோ பருவங்களில் எத்தனையோ ரக விளையாட்டுக்கள். பண்டைத் தமிழ் இலக்கியங்களில் விளையாட்டுக்கு எப்படி முக்கிய இடம் இருந்தது என்பதில் ஆரம்பித்து செ. க. பாலகுருநாதன் பலவித விளையாட்டுக்களுக்கும் பட்டியல் போட்டு விளக்கியும் சொல்கிறார்.

இவற்றில் பல விளையாட்டுக்கள் உங்களுக்கு ஏற்கனவே தெரிந்திருந்தாலும் அவ்விளையாட்டுக்களை விளையாடி விளையாடி அலுத்த உங்களுக்கு அவை பற்றிப் படிப்பது ஒரு மாறுதலாக இருக்கும். மேலும் பல புதிய விளையாட்டுக்களையும் வித்தைகளையும் கற்றுக் கொள்ளும் வாய்ப்பும் உண்டே! விலை: ரூ. 3. 50

மேற்கூறிய மூன்று புத்தகங்களை வெளியிட்டோர்: **கலைமகள் காரியாலயம், சென்னை-4.**



ஸ்ரீரங்கத்து உலக்கையா? அப்படியென்றால் என்ன?

அந்தக் காலத்தில் இப்போதுபோல் அரிசி அரைவைக்கு இயந்திரங்கள் இல்லை. மிகப் பெரிய கோயிலான ஸ்ரீரங்கத்தில் நிலைப்படி நிவேதனக் கட்டளைக்காக ஏராளமான அரிசி தேவைப்படும். எல்லாமே கைக் குத்தல் மூலம் தயாரிக்க வேண்டும். பெரியதொரு மண்டபத்தில் உள்ள நெற் களஞ்சியத்திலிருக்கும் நெல்லை இறைவன் கைங்கர்யத்துக்காக அரிசியாகக் குத்தும் பணியைப் பக்தர்களே மேற்கொண்டார்கள். புடைத்துச் சலிக்கத் தனி வேலைக்காரர்கள் பொறுப்பில் இருந்தாலும் கோவிலுக்கு வரும் ஒவ்வொரு பக்தரும் நெல் குத்தும் பணியைச் செய்வார்கள். ஒருவர் குத்தி முடித்ததும் உலக்கையைக் கீழே வைக்காமல் மற்றவர் கைக்கு மாற்ற - அவர் இன்னொருவரிடம் தர - பணி ஆரம்பித்ததிலிருந்து முடியும் வரையில் ஓய்வேயில்லாமல் உலக்கைக்கு வேலை இருக்கும்.

அதிலிருந்துதான் கைக்குக் கை மாறித் தொடர்ந்து உபயோகிக்கப் படும் பொருள் மட்டுமின்றி ஓய்வொழிவில்லாமல் வேலை செய்பவரும் ''சீரங்கத்து உலக்கையைப் போல'' என்ற உபமானத்தைப் பெற்றுவிட்டார் இந்தக் காலத்தில்.

-''நமால்''

சம்சுர் ரஹ்மான் பங்களா தேஷில் ஒரு பிரபல கவிஞர். இது அவர் எழுதிய 'ஒருவனுடைய சொந்த வீட்டில்' என்ற கவிதையின் ஒரு பகுதி. கவிதை தமிழில்:

உன்னை ஒரு பூங்காவுக்கு
அழைத்துப்போக நினைத்தேன்.

ஆனால் போக்கிரிகளின் கூச்சல்
களும் கத்திகளும் அங்கே!

உன்னை என்னோடு வாக்கிங்
அழைத்துப்போக நினைத்தேன்.

ஆனால் போகு மிடமெல்லாம்
பசியின் அழுகுரல்.

உன்னை ஒரு படகில் அழைத்
துப் போக நினைத்தேன்!

ஆனால் தண்ணீர் எங்கும்
பிணங்கள் மிதக்கின்றன!

-பாலி -ஹிந்துஸ்தான் டைம்ஸ்



'உங்களை டாக்ஸி டிரைவர் ஏற்றிக்கொள்ள மறுத்தாரா? அருகில் உள்ள போலீஸ் சார்ஜெண்டிடம் சொல்லுங்கள்' என்று அறிவிப்புப் பலகைகள் கல்கத்தா சாலைகளில் காணப்படுகின்றன. -'பாபு'

'ஸ்டேட்ஸ்மன்.

குடும்பத்தினர் அனைவரும்
திட ஆரோக்கியத்துடன் திகழ
ஃபாஸ்ஃபோமின்





ஃபாஸ்ஃபோமின்
- சக்தியை அதிகரிக்கிறது
- பசியைத் தூண்டுகிறது
- வலிமையைப் பெருக்குகிறது
- நோய்களை எதிர்க்கும் சக்தியைக் கூட்டுகிறது.






SQUIBB
SARABHAI CHEMICALS

ஜெ. ஆர் ஸ்க்விப் & ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட்டின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்காகும். கரம் சந்த் ப்ரேம் சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

ஃபாஸ்ஃபோமின்...
பழரஸ மணம் கமழும்
பச்சை நிற விடமின்
டானிக்.

Shilpi HPMA-35A/70 Tam

எவனுடைய காலைத் தூக்கி அம்மியின் மீது வைத்தேனோ, எவனுடைய நயனங்களுக்கு அருந்ததி காட்டினேனோ, எவனுடைய கழுத்தில் மாங்கல்யத்தின் முதல் முடிச்சினை இட்டேனோ அவனை எண்ணிக் கொண்டு அலுவலக நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்தேன். கடந்த வருடத்தில் திருமணமான புதிதிலும் இப்படித்தான் அவனுடைய நினைவாகவே இருப்பேன். இப்போதும் அவனையேதான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். அது இன்பத்தின் உச்சாணிக் கொம்பு. இது நரகத்தின் படு பாதாளம்.

அப்போதெல்லாம் கமலா எனக்கெனவே அர்ப்பணிக்கப்பட்ட தன்னலம் கருதாது வாரி வழங்கும் அன்புப் பெருக்கில் மலர்ந்த ஒரு புஷ்பம். என்னைவிடப் பாக்யசாலி வேறு எவருமே இருப்பது அசாத்தியம் என்று என்னை நினைக்க வைத்த பாரம்பரியம் அந்தப் புது வாழ்வுக்கு உண்டு.

என்னுடைய துரதிர்ஷ்டமோ அன்றிக் கமலாவின் ஸ்திரமற்ற போக்கோ ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். கிராமபோன் தட்டைத் திருப்பிப் போடுற மாதிரி அந்த வாழ்க்கை புரண்டு முற்றிலும் மாறுபட்ட வேறொரு வாழ்க்கை தொடங்கி விட்டது.

இன்பத்தில் நீந்திய நான் இப்போது வட்டியும் முதலுமாகத் துன்பத்தில் மூழ்கிக் கொண்டிருக்கிறேன்.

டெலிபோன் மணி ஒலித்தது.

''எஸ்.... ரங்கநாதன் பேசறேன்'' என்றேன்.

''நான்தான் கமலா பேசறேன்''—என்னை அல்லும் பகலும் துரும்பாக அலைக்கழிக்கும் என் மனைவியின் குரல் கொஞ்சலாக ஒலித்தது.

''என்ன கமலா?... என்ன விஷயம்?''

''நீங்க சாயந்திரம் எத்தனை மணிக்கு வருவீங்க?''

''ஆறு மணி ஆகலாம்...''

''நான் இப்போ என்னோட தோழி வீட்டுக்குப் போகலாம்னு இருக்கேன். அப்படியே 'சங்கம்' தியேட்டர்லே முதல் ஆட்டம் பார்க்கணும்னு அவள் ரொம்பக் கட்டாயம் பண்ணுகிறாள்...''

''போயிட்டு வாயேன்!''

''நான் வர்றதுக்கு ராத்திரி பத்து மணிக்கு மேலே ஆயிடுமே.''

''ஏன், கார் அனுப்பட்டுமா?''

''அதில்லே...நான் அவளோட காரிலேயே வந்துடறேன். நீங்க நேரத்தோட சாப்பிட்டு

# காளானல்ல....



டுங்கோ. வலே பீரோவிலே எல்லாம் வச்சு மூடியிருக்கேன். சாயங்காலம் டிபனுக்கு அவலைப் பால்லே ஊறப்போட்டு வைக்கிறேன். எடுத்துக்குங்க.''

''சரி.''

ஃபோன் வைக்கப்பட்டு விட்டது.

நான் ரொம்பப் பலவீனமானவன். என்னால் என்னுடைய கோபத்தை ஃபோனில் கூடக் காட்ட முடியவில்லை. அவள் எப்போது எதைக் காரணம் காட்டிக் கேட்டாலும் என்னால் அனுமதி மறுக்க முடியவில்லை. அவளுடைய போக்கிடத்தை நன்றாக அறிந்திருந்தும் எதிர்ப்புக் காட்டத் தெரியாத கோழையாக நான் எப்போது மாறினேன் என்பது துருவித் துருவியும் விடை காண முடியாத கேள்வியாகி விட்டது.

ஒருகால் இன்றைக்காவது கமலா சொன்னது உண்மையாக இருக்குமோ? என்னுடைய தப்பாசைக்கு மட்டும் விடிவே கிடையாது.




டெலிபோன் ரிஸீவரை எடுத்து டயலைச் சுழற்றினேன்.

''ஹலோ!... நான் ரங்கநாதன் பேசறேன். மூர்த்தி இருக்காரா?''

''ஓ... நீங்களா?...அவர் ஆபீஸ்லே இருக்காரே'' — மூர்த்தியின் மனைவி கலாவின் குரல் கேட்டது.

''இல்லே... எத்தனை மணிக்கு வருவார்னு தெரிஞ்சுக்கத்தான் ஃபோன் பண்ணினேன். அவருடைய ஆபீஸ் ஃபோன் 'என்கேஜ்டா'கவே இருக்கு. காண்டாக்ட் பண்ண முடியல்லே...'' என்றேன் பச்சைப் புளுகாக.

''இன்னிக்கு அவர் நண்பர்களோட எங்கேயோ போகணுமாம். ராத்திரி பத்து மணிக்கு மேலேதான் வருவார். கார்த்தாலேயே சொல்லிட்டுத்தான் போனார்.''

நான் டெலிபோனை வைத்துவிட்டேன்... எதிர்பார்த்ததுதான்.

நான் வியர்த்து விறுவிறுக்கவில்லை. நெஞ்சைப் பிடித்துக் கொண்டு துடிக்கவில்லை. இந்த விஷயம் எனக்குப் பழசாகிவிட்டது. கேட்டுக் கேட்டுக் காது புளித்துவிட்டது.

அறையின் ஏர்-கண்டிஷன் குளிரிலும் உடம்பு அனலாகத் தகித்தது. மனம் பழைய நினைவு அலைகளை அசை போட்டது.

அன்று காலை.

அன்றுதான் எனக்குப் பிடித்தது சனியன்.

கமலா காப்பித் தம்ளரோடு கட்டிலருகே நின்று கொண்டிருந்தாள். காப்பியை வாங்கிக் கொண்ட நான் அவளை இழுத்துப் பிடித்துக் கட்டிலில் அமர்த்திக் கொண்டேன்.

''ஐயோ விடுங்களேன். தலைக்கு மேலே வேலை இருக்கு. நான் போகணும்.''

''அதிருக்கட்டும், கமல்... இன்னிக்கு ஞாபகம் இருக்கா? என்னோட உயிர் நண்பன் தன் வீட்டுக்கு வரான். சமையலெல்லாம் பிரமாதமா இருக்கணும். முன்னே நடந்துண்ட மாதிரி கர்நாடகமா நடந்துக்காதே! இந்த மூர்த்தி பர்ஃபெக்ட் ஜெண்டில்மேன். நீ மனம் விட்டு அவனோடு பேசலாம்.''

''அவங்க கூடல்லாம் நீங்க குதிச்சுக் கும்மாளம் போடுங்க. நான் வேண்டான்னலே... ஆனா என்னையும் இழுக்காதீங்க.''

பேச்சுக் சுவாரசியத்தில் அவளுடைய இடையைச் சுற்றியிருந்த என் கரத்தை நான் தளர்த்தியபோது சடக்கென்று கட்டிலிலிருந்து குதித்துவிட்ட கமலா எனக்கு 'வெவ்வே' காட்டி விட்டு ஓடிவிட்டாள்.

சொல்லி வைத்த மாதிரி சரியாகக் காலை ஒன்பது மணிக்கு அவன்—என்னுடைய நெடுநாளைய நண்பன் மூர்த்தி—வந்து விட்டான்.

ஒரு சராசரி இந்தியனின் உயரத்தை மிஞ்சக்கூடாது என்று கங்கணம் கட்டிக் கொண்டது போல் ஐந்தடி ஐந்தங்குலம் மட்டுமே வளர்ந்திருந்த எனக்கு ஆறடிக்கும் மேல் உயரமாகச் செக்கச்செவேலென்று ஆங்கிலோ இந்தியன் மாதிரி ஆஜானுபாகுவாக மூர்த்தி ஓர் அதிகாரியின் தோரணையில் வீட்டினுள் நுழைந்தபோது எனக்குப் பெருமை பிடிபடவில்லை.

நான் மாநிறம். ஆனால் மூர்த்திக்குச் சம்பத்தில் நின்றால் அசல் கறுப்பன்தான். இவன் தான் என் நண்பன் என்று அவனைக் கமலாவின் முன் நிறுத்தி மார்தட்டிக் கொள்ள வேண்டும் போல் இருந்தது எனக்கு.

சாப்பிடும்போது மூர்த்தி ரொம்ப சங்கோசப்பட்டான். கமலாதான் பலவந்தமாக அவன் தட்டில் எல்லா அயிட்டங்களையும் தாராளமாகத் தள்ளி அவனைத் திணறடித்து விட்டாள்.

இந்தச் சந்திப்பில் மூர்த்திதான் பெண் பிள்ளை மாதிரி ரொம்பக் கூச்சப்பட்டதாக நான் உணர்ந்தேன். கமலா நான் எதிர்பார்த்ததினும் சகஜமாகப் பழகியது எனக்கு ரொம்பப் பிடித்திருந்தது.

நான் வினைகளை விதைத்துக் கொண்டிருக்கிறேன், அவைகளைப் பின்னர் அறுக்க வேண்டிய கடமையும் என்னைச் சாரப் போகிறது என்பதையெல்லாம் அறியாத அப்பாவியாக மூர்த்தியோடு கழித்த அந்த மகிழ்ச்சியான

நாட்களையும், இப்போது கமலாவோடு வாழும் இந்த இன்பம் நிறைந்த நாட்களையும் அசை போட்டுக் கொண்டிருந்தேன்.

மூர்த்தியின் விஜயம் முடிந்து பத்துப் பதினைந்து நாட்களுக்குப் பிறகு கமலாவே மீண்டும் என்னிடம் கேட்டாள்:

''உங்க நண்பர் ஏன் அதுக்கப்புறம் வரவேயில்லே? மனைவியையும் அழைச்சுண்டு ஒரு நாள் வரதாச் சொன்னாரே...''

''இன்னும் ஒரு வாரம் போகட்டும். நாமாகவே இன்னொரு நடவை கூப்பிடலாம்'' என்றேன் நான்.

பின்னர் ஒரு நாள் மூர்த்தி, நான் அலுவலகத்தில் இருக்கும்போது ஏதோ அவசர காரியமாக வீட்டுக்கு வந்தவன் கமலாவோடு ஒன்றிரண்டு மணி நேரம் அரட்டை அடித்துக் கொண்டிருந்து விட்டு நான் வருவதற்குள் போய்விட்டான்.

இது, நான் பின்னர் அறிந்த சமாசாரம்.

டெலிபோனிலும் இந்தச் சம்பவத்துக்குப் பிறகு அவர்கள் அடிக்கடி பேசிக்கொள்ளுகிறார்கள் என்பதைக் கேள்விப்பட நேர்ந்தது.

இப்போது சிநேகம் மேலும் முற்றி சினிமா, 'ஈவினிங் வாக்' என்று வேறு கிளம்பத் தொடங்கி விட்டார்கள்.

நான் இடிதாங்கி மாதிரி ஒவ்வோர் அதிர்ச்சியையும் மௌனமாகத் தாங்கிக் கொண்டு வாயற்ற ஊமையாகக் கணவன் என்ற கௌரவமான அந்தஸ்தின் சரிவைப் பகிரங்கப்படுத்திக்கொள்ளத் திராணியற்றவனாகக் கண் தெரிந்தும் கிணற்றினுள் விழுகிற மாதிரி என்னை நானே இத்தனை காலமும் ஏமாற்றிக் கொண்டிருக்கிறேன்.

உள்ளத்தின் மூலையில் துளிர் விடும் ஒரே ஒரு நம்பிக்கை. என் கமலா நல்லவளாகி விடுவாள். என்றாவது ஒரு நாள் மூர்த்தியின் சகவாசத்தை அடியோடு வெட்டி எறிந்து விட்டு என்னிடம் ஓடிவந்து அடைக்கலமாகி விடுவாள்; என்று கொம்புத் தேனுக்கு ஆசைப்படுகிற முடவன் மாதிரி ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.

தள்ளுகதவைத் திறந்துகொண்டு ஸ்டெனோ டைப்பிஸ்ட் ஜானகி என் அறையினுள் பிரவேசித்ததும் என் சிந்தனைகள் தடைப்பட்டன.

சிநேக பாவமெனத் தோன்றும்படியாக ஓர் இளமுறுவலைச் சிந்தியபடி எனக்கு எதிர்ப்புறம் இருந்த ஆசனத்தில் அவள் அமர்ந்து கொண்டாள்.

அவள் தனது உடையலங்காரத்தில் விசேஷ கவனம் செலுத்தியிருந்ததை நான் கவனிக்கத் தவறவில்லை.

மடமடவென்று அன்றைக்கு ரொம்ப அவசரமாகப் பதில் எழுத வேண்டியிருந்த ஒருசில கடிதங்களுக்கு மட்டும் பதிலை 'டிக்டேட்' செய்துவிட்டு டைப் செய்து கொண்டு வரும்படி கூறினேன்.

ஜானகி எழுந்து இரண்டடி நடந்திருப்பாள். இன்னொரு கடிதமும் டிக்டேட் செய்துவிட எண்ணி, சாதாரணமாக 'லுக் ஹியர்' என்றோ, 'ஒரு நிமிஷம்' என்றோ சொல்லிக் கவனத்தைத் திருப்பி விஷயத்தைச் சொல்லும் வழக்கமுடைய நான் வாய் தவறுதலாக 'ஜானகி' என்றே அவளைப் பெயர் சொல்லி அழைத்து விட்டேன்.

ஒயிலாக அதே சமயம் வேகமாகக் குதித்துக் கொண்டு நெஞ்சின் மீது வந்து விழுகின்ற மாதிரி 'என்னவாம்' என்று சிணுங்கிக் கொண்டே அருகில் வந்து நாற்காலியில் அமராமல் மேஜையின் விளிம்பைப் பற்றியபடி என் முகத்துக்குச் சமீபத்தில் குனிந்தாள்.

வெண்டைப்பூ நிற முகம். ஆரத்திச் சிவப்பு அதரங்கள், மெல்ல மெல்ல அந்த முகம் என்னை நெருங்கியபோது அந்த ஒருசில விநாடிகளில் நான் எத்தனை பலவீனமானவன் என்பதை உணர்ந்து கொண்டேன். இளைஞர்களிடம் பலிக்கக் கூடிய ஒருசில பிரத்தியேகமான சக்திகளை ஆண்டவன் பாரபட்சம் நிறைந்தவனாகப் பெண்களுக்கு மட்டும் கொடுத்து விட்டிருக்கிறான்.

''அந்தக் கடிதங்களை டைப் செய்து இப்போதே கொண்டு வர வேண்டாம். நாளைக்குக் கையெழுத்துக்கு அனுப்பினால் போதும்'' என்று சொல்லி அவளைத் திருப்பி அனுப்பினேன்.

ஜானகி திருமணமானவள் என்பது எனக்குத் தெரியும். அவள் கணவன் ஸ்டேட் பாங்க் ஆஃப் ஹைதராபாத்தில் வேலையில் இருப்பதாக நினைவு.

என்னைவிட அழகனான மூர்த்தியைக் கமலா வலைவீசிப் பிடித்த மாதிரி, இவளுடைய கணவனைக் காட்டிலும் நான் அழகாக இருக்கிறேன் என்பதால் அவள் எனக்கு வலைவீச முயல்கிறாள் போலும்.

எனக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை. இதென்ன, சிறுபிள்ளைத்தனமான விளையாட்டு! பெண்களைத் தாய்க்குலம் என்று போற்றிப் புகழ்ந்து சமுதாயமே இறுமாந்திருக்கின்ற இந்த வேளையில் இவர்கள் ஏன் மிருகங்களாக நடந்து கொள்கிறார்கள்?

சோர்ந்து வழிந்த நெஞ்சத்தோடு அங்கே உட்கார்ந்திருக்க என் மனம் இடம் கொடுக்கவில்லை.

நான் வீட்டுக்குப் போக விரும்பவில்லை. மூர்த்தியோடு சினிமாப் பார்த்துவிட்டு இரவில் கமலா வரும்போது நான் வீட்டிலிருக்க விரும்பவில்லை. கமலாவின் முகத்தையே இனிப் பார்க்க விரும்பவில்லை. அவளோடு பேச விரும்பவில்லை. கமலா என் மனைவி என்கிற நினைப்பே நஞ்சாகி விட்டது. அது அகற்றப்படாவிடில் அந்த நஞ்சு என்னைக் குடித்துவிடும்.

ஆகவே காரில் சென்று அமர்ந்து ஸ்டார்ட் செய்தேன். அப்போது—

''ஹலோ... ரங்கநாதன்...''

குரல் வந்த திசையில் திரும்பினேன்.

என் கல்லூரி நண்பன் வேணுகோபாலன்.

''டேய்... உன்னைப் பார்த்து எவ்வளவு நாளாச்சுடா!'' காரிலிருந்து இறங்கி என்னை இறுகக் கட்டிக் கொண்டு விட்டான் வேணு.

அந்தக் கல்லூரி வாழ்க்கையின் நினைவின் வலிப்பில் நிகழ்காலம் முழுவதையும் மறந்தவனாக, ''பரீட்சையெல்லாம் முடிஞ்சப்புறம் கடைசியா ஒரு நாள் 'க்வாலிடி'க்குப்

போய்க் கூத்தடிச்சோமே ஞாபகமிருக்காடா, உனக்கு?'' என்று அவன் முதுகில் பலமாகத் தட்டினேன்.

''இன்றைக்கும் நாம் அங்கே போனால் என்ன?'' என்றான் வேணு.

கார் 'க்வாலிடி'யில் நின்றது.

வேணுவோடு கரம் கோத்தபடி ஸ்கிரீனை விலக்கிக் கொண்டு ஹைதராபாத் கம்பளம் தரையை அலங்கரிக்கும் அந்தப் பிரம்மாண்ட மான ஹாலினுள் நுழைந்தோம்.

அடுத்த விநாடியே வேணுவையும் அழைத்துக்கொண்டு ஸ்கிரீனுக்கு வெளியே வந்து விட்டேன்.

மேஜையின் மீது பீர், பிராந்திப் பாட்டில்கள் பரப்பி வைக்கப்பட்டிருக்க எதிரெதிராக நாற்காலிகளில் கமலாவும் மூர்த்தியும் அமர்ந்தபடி இந்த உலக சிந்தனையே அற்றவர்களாகச் சிரித்துச்சம்பாஷித்துக்கொண்டிருந்த காட்சியை நான் இந்த இடத்தில் இந்த நேரத்தில் இவளோடு வந்து காண்பேனென்று எதிர்பார்த்திருக்கவில்லை. என்னுள் ஒரு பூகம்பமே தோன்றிவிட்டது.

தடதடவென்று படியிறங்கிக் காரிலமர்ந்து ஸ்டார்ட் செய்து கியரை மாற்றினேன்.. ரிவர்ஸில் எடுத்துத் திருப்பிக் கொண்டேன். நடைபாதையில் சிலையாக நின்ற வேணுவைச் சட்டை செய்யவே இல்லை நான். அவன் நினைத்திருப்பான் எனக்குப் பைத்தியமென்று.

வேகம், வேகம் — மூர்த்தியின் பின்னும் ஓடும் கமலாவின் தாறுமாறான எண்ணங்களின் வேகம்.

ஹோட்டல் துவாரகாவின் போர்டிகோவில் காரை நிறுத்தியதும் அட்வான்ஸ் பணத்தை 'கேஷ் கவுண்டரி'ல் கட்டிவிட்டு ஓர் ஒற்றை அறைச் சாவியை வாங்கிக்கொண்டதும், அறையினுள் புகுந்து கதவைத் தாழிட்டுக் கொண்டதும், கட்டிலில் சாய்ஷவுடனும், கழுத்து டையுடனும் விழுந்ததும் எனக்கு மறு நாள் பொழுது புலர்ந்து வெகு நேரம் கழிந்த பின்னர் கண் விழித்த போதுதான் நினைவுக்கு வந்தன.

தொடர்ந்து பத்து மணி நேரத் தூக்கத்துக்குப் பின்னர் மனம் இலேசாகி யிருப்பதையும் நினைவுகள் தெளிந்திருப்பதையும் உணர்ந்தேன்.

ஹோட்டல் பையன் கொண்டு வந்த நல்ல காப்பி தொண்டைக்குள் இறங்கியது. சாவதானமாக எழுந்திருந்து ஷேவ் செய்து, குளித்து உடை மாற்றிக் கொண்டு நான் அலுவலகத்தை நோக்கிக் காரைக் கிளப்பும் போது என் நெஞ்சு நிமிர்ந்திருப்பதாக உணர்ந்தேன்.

கமலாவினுடைய உடல் களங்கப்பட்டதோ இல்லையோ, ஆனால் உள்ளம் கறைப் பட்டுவிட்டது. இனி அவள் என்னோடு வாழும் தகுதியை இழந்து விட்டாள்.

திரிந்து போன பாலையும் மீண்டும் காய்ச்சி இனிப்பிட்டுப் பண்டம் தயாரிக்கும் மிட்டாய்க் கடைக்காரன் அல்ல நான். தரையில் சிந்திவிட்ட தேனை நக்கிக் குடிக்கும் நாயல்ல நான். தின்றுவிட்டுப் போட்ட எச்சில் இலையைப் பொறுக்கிப் பசியாறும் குருவிக்காரனல்ல, நான்.

நான் கமலாவைத் தவிர்த்துவிட்டேன்.



என்னுடைய அலுவலக நாற்காலியில் நான் அமர்ந்ததும் அமராததுமாகத் தள்ளு கதவை இடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தவள் ஜானகி.

தள்ளு கதவிலிருந்து என் மேஜைக்கு இருந்த பதினைந்தடி தூரத்தை நாட்டிய அபிநயங்களோடு உடலில் ஜாடைமாடையான குலுக்கல்களோடு கடந்து வந்த ஜானகி தோளிலிருந்து 'தானாக' நழுவி முழங்கையின் மீது விழுந்த முந்தானையைக்கூடச் சரிசெய்து கொள்ள 'மறந்தவளாக' எனக்கு அருகில், வெகு அருகில் நெருங்கி நான் நேற்று டிக்டேட் செய்திருந்த கடிதங்களை என் கையொப்பத்துக்காக வைத்தாள்.

''ப்ளீஸ் பி ஸிட்டட் ப்ராபர்லி'' — என் குரலில் தொனித்த உறுதியும் கடுமையும் அவளை அச்சுறுத்தியிருக்க வேண்டும்.

திடீரென்று தன்னிலைக்கு வந்தவள் போல் முழங்கையிலிருந்த புடவையை அள்ளித் தோள்மீது போட்டுக் கொண்டு அரையும் குறையுமாக நான் கையெழுத்திட்ட இடாத எல்லாக் கடிதங்களையும் அள்ளிக் கொண்டு ஒன்றுமே தெரியாதவள் மாதிரி சென்று விட்டாள்.

அவள் பெரும் ஏமாற்றத்தைச் சுமந்து கொண்டு போகிறாள் என்பது அவளுடைய நடையின் தொய்விலிருந்து தெரிந்தது.

இவர்களைப் பொறுத்தமட்டில் கண்ணகி கல்லாக நிற்கிறாள்; கற்பு ஏட்டில் அச்சாகிக் கொண்டிருக்கிறது.

தள்ளு கதவின் பக்கம் மீண்டும் நிழலாடியது. கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தவள் கமலா. தொடர்ந்து அவளுடைய அண்ணன் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் விசுவநாதனும் நுழைந்தான்.

கமலாவின் முகத்தில் தெரிந்த புன்னகையில் — எனக்கும் அவளுக்கும் மட்டுமே புரியக் கூடிய பல — அன்யோன்யங்கள் புதைந்து கிடந்ததை உணர்ந்தபோது நான் என்னுள் அதிர்ந்தேன். இப்படிக் கமலா வெள்ளையாகச் சிரித்துப் பல தினங்கள் கடந்து விட்டதை நான் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டியிருந்தது. என்மீது அன்பு மழை வர்ஷிப்பது போல் அவள் நயனங்களை மலர்த்தி என்னையே நோக்கிக்கொண்டிருந்தபோது நான் சிலிர்த்துக் கொண்டேன். ஒருகால் நான் அவசரப்பட்டு விட்டேனோ?

''என்ன இது! என்னைப் பார்த்ததும் அப்படியே மலைச்சுப் போயிட்டீங்க?'' கமலாவின்

# என்னூர் அனல் மின்நிலையம் திறம்பட இயங்க,



# திருச்சி கனரக கொதிகலன் தொழிற்சாலை, ஆற்றிய அரும்பணி

450 MW எண்ணூர் அனல் மின் நிலையம் சென்னையிலும், அதன் சுற்றுப்புறத்திலும் ஒரு புது சகாப்தத்தை உருவாக்கியுள்ளது.

இப்பகுதியில் விவசாயம், தொழில் வளம் பெருக புதிய மின்சக்தி உற்பத்தியில் இம் மின் நிலையத் திற்கு துணைபுரிவதில் BHEL பெருமிதமடைகிறது.

முதல் கட்டத்தில் எண்ணூர் மின் நிலையத்தில் 110 MW கொதிகலன்கள் இரண்டும், 60 MW கொதிகலன்கள் இரண்டும் செயல்படும். திருச்சி BHEL கனரக கொதிகலன் தொழிற்சாலை இந்த இரு 60 MW கொதிகலன்களையும் வடிவமைத்து நிறுவியுள்ளது.

அவற்றில் ஒன்று முன்பே செயல்படத் தொடங்கி விட்டது. மற்றது இப்போது துவங்குகிறது. இத னால் சேமிக்கப்பட்ட அந்நிய செலாவணி சுமார் ரூ. 6.60 கோடி. இதைத் தவிர BHEL ஹைதரா பாத் தொழிற்சாலை ரூ 2.80 கோடி மதிப்புள்ள டர்பைன்களையும் அளித்துள்ளது.

செக்கோஸ்லோவாகியா அளித்துள்ள இரு 110 MW கொதிகலன்களுக்கும் திருச்சி BHEL ரூ. 2.50 கோடி மதிப்புள்ள உறுப்புகளை அளித்துள்ளது.

ஐந்தாவது 110 MW கொதிகலனை BHEL தொழிற்சாலையே வடிவமைத்து நிர்மாணிக்கும். இதன் மதிப்பு ரூ. 6 கோடியாகும்.

எண்ணூர் திட்டத்தின் முதலாவது கட்டத்தின் மதிப்பு ரூ. 45 கோடி. இதில் கொதிகலன்கள், டர்பைன்கள், இதர துணைக் கருவிகள் அளித்த வகையில் BHEL பங்கு ரூ. 15 கோடி.

BHEL தொழிற்சாலையின் இம் மகத்தான சாதனைக்கு காரணம் மிக உயர்ந்த பொறியியல் திறனும், இடையறாத உழைப்புமேயாகும்.

ஒவ்வொரு 60 MW கொதிகலனுக்கும் இரும்பு, எஃகு அங்கங்களைத் தயாரிக்க 30,000 வரை படங்கள் 4,00,000 மணிநேர உழைப்பு, 3,000 டன் எடையுள்ள கட்டுமானங்கள், வால்வுகள், விசிறிகள், மற்றும் துணை சாதனங்கள், இவற்றை அனல் மின் நிலையம் கட்டுமிடத்திற்கு கொண்டு சேர்த்து நிர்மாணம் செய்யப்பட்டன.

ஒவ்வொரு பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் 60 MW கொதிகலனும் நாளொன்றுக்கு 1000 டன் நிலக் கரியை உபயோகித்து மணியொன்றுக்கு 2,60,000 லிட்டர் தண்ணீரை மின் சக்தியாக மாற்றும் தவிர ஹைதராபாத், ஹரித்வார் முத லிய இடங்களில் உள்ள தம் சக நிறுவனங்களின் துணையுடன் நாட்டு வளம் கொழிக்க, மின்சக்தி உற்பத்தியில் BHEL திருச்சி பணியாற்றுகிறது.

BHEL கொதிகலன்களை உபயோகிக்கும் இதர அனல்மின் நிலையங்கள்: ஹர்துவாகஞ்ச் (உ.பி) - டில்லி - பதார்பூர் - (டில்லி) கொத்தகுடம் (ஆந்திரா) - ஒப்ரா (உ.பி) - பத்ராது (பீகார்) - நாம்ரூப் (அஸ்ஸாம்) - பாடிண்டா (பஞ்சாப்) - உகாய் (குஜராத்) - பன்கி (உ.பி) - கோரடி (மகாராஷ்டிரா) - பட் (குஜராத்). இவற்றின் மொத்த மதிப்பீடு சுமார் ரூ. 180 கோடியாகும்.

பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் லிமிடெட்
(இந்திய அரசு நிறுவனம்)
ஹைப்ரெஷர் பாய்லர் தொழிற்சாலை, திருச்சிராப்பள்ளி-14
பதிவுபெற்ற அலுவலகம்: 5, பார்லிமெண்ட் தெரு, புதுடில்லி-1

**வளம் கொழிக்க மின்சக்தி உற்பத்திப்பணியில்... BHEL**

BHEL-6100

குரல் என்னை உசுப்பியதால் தானத்துக்குக் கொண்டு வந்தது.

''ரங்கநாதன்! கமலா மட்டும் உதவி செய்யலேன்னா அந்தக் கள்ளக் கடத்தல் பேர்வழி மூர்த்தி என்கிட்ட பிடிபட்டேயிருக்க மாட்டான். இன்று காலை ஆறு மணிக்குத்தான் அவனைக் கைது பண்ணினோம். அவனைக் கண்காணிக்கத் துப்புக் கண்டு பிடிக்கச் சொல்லி நான் கமலாவைக் கெஞ்சி, கூத்தாடி வேண்டிண்டதெல்லாம் வீணாகப் போகல்லே.''

வேகமாக மூச்சு விடாமல் பேசின விசுவநாதன், ''நான் எங்க ஆபீசுக்கு டெலிபோன் பண்ணிக்கிறேன்'' என்று சொல்லிவிட்டுப் பக்கத்தில் உள்ள எக்ஸ்சேஞ்ச் அறைக்குள் ஓடினான்.

''ரொம்ப நாள் பிடிபடாது இருந்தவன் இன்னிக்கு மாட்டிண்டுட்டவே அண்ணாவுக்கு சந்தோஷத்திலே தலைகால் புரியல்லே. என்னைக் குழந்தையாட்டம் ஓடறூர்.''

கமலா இன்னும் என்னென்னவோ சொல்லிக்கொண்டு போனாள்.

எனக்கு ஏதோ சினிமாப் பார்ப்பது போல் இருந்தது. நான் நிச்சயமாக வடிகட்டின முட்டாள். இதில் சந்தேகத்துக்கே இடமில்லை.

ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் சம்பாதிக்கும் எனக்கு மூளை போதவே கிடையாது. ஒரு கார், இரண்டு பங்களா, எஸ்டேட் எல்லாவற்றுக்கும் அதிகாரியான எனக்குப் பகுத்தறிவு கிடையாது. தாலி கட்டிய மனைவியின் மீது அபாண்டமான பழி எண்ணத்தை எனக்குள் தோற்றுவித்துக் கொண்டு சைத்தானுக்குக் காவடி தூக்கி யிருக்கிறேன். தன்னை எனக்காக அர்ப்பணித்துக் கொண்ட தேவதையின் செயல்களைக் குட்டிச்சாத்தானின் செயல்களோடு அலசியிருக்கிறேன். சிப்பியினுள் இருக்க முத்தைப் பிரித்தெடுத்து ஓட்டை வைத்துக் கொண்டு முத்தினைத் தூக்கி எறியும் மடத் திருப்திக்கா என்னை நான் தயார்ப்படுத்திக் கொண்டிருந்தேன்?

நான் இன்று நேற்றாக இப்படி யில்லை. சந்தேகம் என் பிறவி வியாதி. இதை உணர்ந்தேயிருந்த போதிலும் கமலா விஷயத்தில் நான் வேதாளமாகி விட்டது எப்படி?

''நேத்து ராத்திரி யெல்லாம் நீங்க என்னை எதிர்பார்த்து ஏமாந்திருப்பீங்க. எம்மேலே கோபந்தானே? அதான் பேச மாட்டேங்கிறீங்க. மூர்த்தியை லாக்-அப்லே தள்ளுகிற வரையும் நான் அவனைக் கண்காணிக்கிற விஷயம் உங்களுக்குத் தெரியக் கூடாதுன்னு அண்ணா என்கிட்டே சத்தியம் வாங்கியிருக்கான்.''

எனக்கு உண்டான அதிர்ச்சியை ஒளித்துக் கொண்டு கமலாவுக்காக நான் அசட்டுத்தனமாகச் சிரித்து வைத்தேன்.

இடையில் விசுவநாதனும் வந்து எங்களுடன் சேர்ந்து கொண்டான்.

''எங்க அதிகாரி என்னை எப்படிப் பாராட்டினார் தெரியுமா? இந்தக் கள்ளக் கடத்தல் பேர்வழியை நாங்க ஆறு வருஷமா 'சேஸ்' பண்றோம். இவனுக்கு பர்மா, ஜப்பான், ஜெர்மனி மூன்று நாடுகளிலேயும் கூட்டாளிகள் உண்டு'' என்று விசுவநாதன் சொல்லிக்கொண்டிருக்கும்போதே அறையினுள் நுழைந்த ஜானகி முதலில் விசுவநாதனுக்கு வணக்கம் செலுத்திவிட்டுப் பிறகு என்னைப் பார்த்து, 'குட்மார்னிங்' என்றாள்.

எல்லோருடைய பேச்சிலும் செயலிலும் புதுப் புது அர்த்தங்கள் தொனிப்பது புரியாமல் நான் குழம்பினேன். விசுவநாதன் எனக்கு அவளை அறிமுகப்படுத்தினான். ''இவள் எங்கள் இலாகாவின் குற்றப் பிரிவு அஸிஸ்டெண்ட் சப் இன்ஸ்பெக்டர் உஷாகுமாரி. உங்கள் அலுவலகத்தில் ஜானகி என்ற பெயரில் டைப்பிஸ்டாகச் சேர்ந்து உங்களுக்கும் மூர்த்திக்கும் தொழில் ரீதியில் தொடர்பு இருக்குமா என்று கண்டறிய என் மேலதிகாரியால் நியமிக்கப்பட்டவள்.''

''என்னை மன்னிச்சுடுங்க சார்! நீங்கள் நூற்றுக்கு நூறு நல்லவர். நாங்கள் சந்தேகப்படுவதற்கே சம்பளம் வாங்குபவர்கள். உங்களையும் எங்கள் சந்தேகத்துக்கு இலக்காக்கியமைக்கு எங்களை மன்னித்து விடுங்கள்.''

ஜானகியாக நான் அறிந்திருந்த உஷாகுமாரி பேசியபோது எனக்கு சர்வமும் பிடிபட்டுவிட்டது. போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று ஒரு விரிவான ரிப்போர்ட் தயார் செய்ய வேண்டியிருந்ததால் விசுவநாதனும் உஷாகுமாரியும் எங்களிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டு விட்டனர்.

அமைதியாக எதிரே நாற்காலியில் அமர்ந்திருந்த கமலாவைப் பார்த்தேன். எழுந்து என்னருகில் வந்து வாஞ்சையுடன், ''ஏன் ஒரு மாதிரி இருக்கிறீர்கள்? உடம்பு சரியில்லையா?'' என்றபடி கழுத்திலும் நெற்றியிலும் கை வைத்துப் பார்க்கும் அவளை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டேயிருந்தேன். என் கண்களில் துளித்த நீர் தரையில் உதிர்ந்த போது பெரிய சுமை இறங்கியதுபோல நான் உணர்ந்தேன்.

இதைக் கவனித்துவிட்ட கமலா, ''என்ன ஆச்சு உங்களுக்கு?'' என்று என் தோளைப் பிடித்து உலுக்கியபோது, ''நீயா காளான்...? நீதான் கற்பக விருட்சம்!'' என்றேன் சம்பந்தா சம்பந்தமில்லாமல்.

# ஆண்களின் தேவைகளை நிறைவேற்றுகிறது ஒகாஸா



வாழ்விலே வெற்றி காண்பதற்கு வேண்டிய வலிமையை ஆண்களுக்கு அளிக்கிறது ஒகாஸா. வயதுக்கு மிஞ்சிய முதுமையைத் தடுத்து, ஆரோக்கியத்தைக் கூட்டி இளமைத் துடிப்பையும் வலிமையையும் மீட்டுத் தருகிறது ஒகாஸா. உலகெங்கிலும் இலட்சக் கணக்கான வயது வந்தவர்கள் இன்று ஒகாஸா சாப்பிடுகிறார்கள். இழந்த வலிமையை மீட்டுத் தரும் நவீன-டானிக் மாத்திரைகள் அவை.

ஒகாஸா-ஹார்மோ-பார்மா லிமிடெடின் லண்டன்-பெர்லின் தயாரிப்பு.

எல்லா பிரபல மருந்துக் கடைகளிலும் கிடைக்கிறது. அல்லது நேராகவும் பெறலாம்.

**OKASA CO. PVT. LTD.**
P. O. BOX 396, BOMBAY-1.

CV 320

# க்ரைலின் கரெஸ்பாண்டென்ஸ் ஸ்கூலில் சேர்ந்து துணியில் சித்திரம் தீட்டக் கற்றுக் கொள்ளுங்கள்

[illegible] அழகுடன் திகழும் திரைகளும், குஷன்களும், சிறந்த வேலைப்பாடுகளுடன் மிளிரும் கவர்ச்சிமிகு உடைகள், ஒவ்வொரு அறையிலும் அழகுமிகு [illegible] ... எல்லாம் உங்கள் கற்பனை சக்தியுடன் கேமல் க்ரைலின் கலர்கள் இணைவதின் பயன்.

6 சுலபமான பாடங்களில், துணிகளில் க்ரைலின் வர்ணம் தீட்டும் கலையைக் கற்றுக்கொள்ளுங்கள் — க்ரைலின் கரெஸ்பாண்டென்ஸ் ஸ்கூலில் சேருங்கள்.

இந்த திட்டத்தில் இலவச [illegible] புத்தகமும், இலவச குறிப்பு புத்தகமும் கிடைக்கும். பாடத்திட்டம் முடிவடைந்ததும் திறமைச் சான்றிதழ் அளிக்கப்படும்.

கட்டணம்: ரூ. 20/ முழுத்திட்டத்திற்கும்.



## கேமல் க்ரைலின்



எல்லா விவரங்களையும் பெற எழுதுங்கள்:

**க்ரைலின் கரெஸ்பாண்டென்ஸ் ஸ்கூல், கேம்லின் ப்ரை. லிட்., ஆர்ட் மெட்டீரியல் டிவிஷன், ஜே.பி. நகர், பம்பாய் 59 ஏஎஸ், இந்தியா.**





PRATIBHA 207-24 TAM

எழுத்தாளர் பஞ்சாமிர்தத்துக்கு மனம் குறுகுறுத்தது. கை நமநமத்தது. ஏதாவது புதிதாக எழுத வேண்டும் என்ற குடைச்சல் உணர்ச்சி. ஆனால் சமீப காலமாக அவர் வேதாந்த விசாரத்தில் இறங்கிச் சுந்தர காண்ட ஆராய்ச்சியிலும் கீதை ரசனையிலும் லயித்திருந்து விட்டதால், சட்டென்று எதைப் பற்றி எழுதுவது என்று திகைத்தார். ஆனால் எழுத வேண்டும் என்ற உணர்ச்சிக்கும் அடிமையானார்.

ஜன்னல் வழியாகத் தெருவைப் பார்த்துக் கொண்டே யோசனையில் ஆழ்ந்திருந்த அவர் பார்வையில் அங்கே நின்று கொண்டிருந்த ஒரு கறிகாய் வண்டியும் அந்த வண்டிச் சொந்தக்காரனும் விழுந்தார்கள். ஒரு வயதான அம்மாள் அவனுடன் பேரம் செய்து கொண்டிருந்தாள். அவர்கள் என்ன பேசிக் கொண்டிருந்தார்கள் என்று அவர் காதில் விழவில்லை. ஆனால் அந்த வண்டிக்காரன் முகச் சுளிவிலிருந்து அந்த அம்மாள் அநியாயமாய் விலை குறைத்துக் கேட்கிறாள் என்று மாத்திரம் ஊகித்துக் கொண்டார். கடைசியில் அவன் தராசில் கத்திரிக்காய்களை எடுத்து வைத்து நிறுத்து அந்த அம்மாள் கொண்டு வந்திருந்த பையில் போட்டான். அந்த அம்மாள் ஒரு ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்தாள். வண்டிக்காரன் மீதிச் சில்லறையைப் பொறுக்கிக் கொண்டிருக்கும் போதுதான் அவர் அந்தச் சம்பவத்தைப் பார்த்தார். அந்த வயதான அம்மாள் வண்டிக்காரனுக்குத் தெரியாமல், இரண்டு மூன்று கத்திரிக்காய்களைத் திருட்டுத்தனமாகத் தன் பையில் தூக்கிப் போட்டுக் கொண்டாள். அந்த அப்பாவி பொறுக்கிக் கொடுத்த மீதிச் சில்லறையை வாங்கிக்கொண்டு நடையைக் கட்டினாள்.

பஞ்சாமிர்தத்துக்கு ஒரே ஆத்திரம். அளவு சிறிதோ பெரிதோ ! அவர் கண் பார்வையில் ஒரு திருட்டு நடந்து விட்டது. வாசலுக்குப் போய் அந்த வண்டிக்காரனிடம் நடந்ததைச் சொல்லி அந்தக் கத்திரிக்காய்த் திருடியை வழிமறித்துப் பையைப் பிடுங்கச் சொல்லலாம் ! அந்த அம்மாள் உயர்ந்த குரல் எழுப்பி ஊரைக் கூட்டினால், தன் நிலை என்ன ஆவது? சே! சே!.... இந்த அற்ப கத்திரிக்காய்களைத் திருடுபவள், எந்தக் காரியத்தையும் செய்வாள். இதற்கு அற்ப சபலம் காரணமா? இல்லை, பேராசையா? அவர் மனம் குமுறிக் கொண்டிருக்கும்போதே வண்டிக்காரன் போய் விட்டான். அவன் நின்றிருந்த இடம் அவருக்கு ஒரு சிறுகதை வித்தாக மாறியது. அவ்வளவுதான் ! உட்கார்ந்து எழுத ஆரம்பித்தார். அந்த வயதான அம்மாள்தான் கதாநாயகி. நிஜ வாழ்க்கையில் அவளுக்குக் கொடுக்க முடியாத தண்டனையை அவளுக்குத் தம் கதையில் கொடுத்தார். திருடிக் கொண்டு போன கத்திரிக்காய்களை அவள் நறுக்கும் போது அவள் நடு விரலில் காயம் பட்டு விடுகிறது. அதை அவள் கவனிக்காமலிருந்து விடுகிறாள். நாளடைவில் அந்த ரணம் பெரிதாகிப் புரையோடி அவள் ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டியிருக்கிறது. அங்கே அவள் கை விரல்களையே நீக்கிவிட வேண்டும் என்கிறார்கள். அதற்குப் பயந்து அவள் வீடு திரும்பும்போது பழைய கறிகாய் வண்டிக்காரன் அவளுக்கு ஒரு பச்சிலை மருந்து சொல்லுகிறான். அந்த மருந்து அவள் கையைக் குணப்படுத்துகிறது. அவனுக்கு நன்றி தெரிவிக்கும் போது தான் அன்றொரு நாள் அவன் வண்டியில் கத்திரிக்காய் திருடியதை ஒப்புக் கொள்ள வேண்டும்; மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று முடிவு செய்கிறாள்.

கதையை எழுதி முடித்து ஒரு தடவை படித்துப் பார்த்தார். அவருக்குத் திருப்தி. கதை நன்றாக அமைந்து விட்டது என்று பெருமிதப்பட்டார். அப்போதுதான் வெளியிலிருந்து அவருடைய பையன் ராஜு உள்ளே வந்தான்.

"டேய், ராஜு! ரொம்ப நாளைக்கப்புறம் ஒரு கதை எழுதியிருக்கிறேன்! இதைப் படித்துப் பார் !" என்று சொல்லி எழுதி முடித்த கதையை அவனிடம் நீட்டினார். அவன் படித்து முடிக்கும்வரை அவன் முகத்தையே ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தார். அவன் முகத்தில் எந்தவிதமான உணர்ச்சியும் பரவவில்லை. கடைசி வரியைத் தாண்டியதும், சற்று அலட்சியமாகவே 'சூள்' கொட்டிவிட்டு, "அப்பா! இந்தக் கதை பத்திரிகைக் காரியாலயங்களுக்குப் போய் விட்டுத் திரும்பி வந்ததாகவே நீங்கள் எடுத்துக் கொள்ளலாம். அநாவசியமாக இதற்குத் தபால்தலை ஒட்டிச் செலவு செய்ய வேண்டாம்" என்றான் ராஜு. அவன் இந்தக் காலத்து இளைஞன். அச்சாகி வெளிவரும் அத்தனை பத்திரிகைகளையும் ஆதியோடு அந்தம் வரை படிக்கும் பழக்கம் உள்ளவன்.

பஞ்சாமிர்தத்தின் முகம் தக்காளிப்பழமாகச் சிவந்தது. ஆனாலும் கோபத்தைச் சிரமப்பட்டு அடக்கிக்கொண்டு, "இந்தக் கதைக்கு என்னடா, குறைச்சல் ?" என்றார்.

"அப்பா! இதில் ஒன்றுமே இல்லை! அதனால் குறைச்சல் என்ற வார்த்தைக்கு அர்த்தமே இல்லை!...ஏனப்பா!



# கத்திரிக்காய் :

இந்தக் கதையிலே 'செக்ஸ்' மருந்துக்காவது கலந்திருக்கா? அது இல்லேன்னு, அப்புறம் அந்தக் கதையை யார் படிப்பார்கள்? எந்தக் கிழவி கத்திரிக்காய் வாங்கினுல்லென்ன? கையை நறுக்கிண்டால் என்ன? கதையில் கவர்ச்சி அம்சம் இல்லேயே? இந்தக் காலத்து வாசகர்களோடே உங்களுக்கு 'டச்' விட்டுப் போச்சு, அப்டா ! அவர்கள் 'டேஸ்ட்' மாறிப் போச்சுங்கறது உங்களுக்குத் தெரியலே'' என்றுன் ராஜு நிதானமாக.

''டேய்! டேய் ! மெதுவாய்ப் பேசு !.... என்னமோ பெரிய இலக்கிய விமரிசனம் பண்ணறது போலவும், 'நானும், என் கதைகளும்' என்று சில டபார வால்போஸ்டர் பிரிய எழுத்தாளக் கோமாளிகள் தம்பட்டம் அடித்துக் கொள்கிற மாதிரியும் லெக்சர் பண்றியே ! வாழ்க்கையிலே 'செக்ஸ்' தவிர வேறு உணர்ச்சிகளுக்கு இடமே இல்லேன்னு ஓங்கி அடிக்கிறவன் மாதிரின்னு பேசறே ! உன் கணக்குப் பிரகாரம், இந்தக் காலத்திலே கதை எழுதறவன், படிக்கிறவன் எல்லாருமே துச்சாதனன், சகுனி ரகம்தானு? பீமனோடே வீரம் என்னுச்சு ? அது போல் வாழ்க்கையிலே அன்பு, பாசம், பரிவு, ஏமாற்றம் முதலிய மற்ற உணர்ச்சிகளும் இருக்கு! தெரியுமோல்லியோ ?'' என்றுர் பஞ்சாமிர்தம், நிதானமாக.

''அப்பா! நீங்க என்னே இந்தக் கேள்விகள் கேட்டுப் பிரயோசனமில்லே! உங்களைப் போன்ற எழுத்தாளர்களேக் கேட்கணும்!... நீங்க எழுதியிருக்கிற கதையை இந்தக் காலத்து வாசகர்கள் படிக்கணும்னு முதலில் தலைப்பை மாற்றியாகணும்.''

''ஏண்டா! 'தண்டனே'ன்னு கொடுத்திருக்கிறேன். திருடிப்பிட்டு, கைவிரல்களைப் பறிகொடுக்கணுமேன்னு அவன் வேதனைப்படுகிறன். கதைக்குப் பொருத்தம்தானே?''

''அங்கேதான் முதல் தப்பு! கதைக்கும் தலைப்புக்கும் எவ்வளவுக் கெவ்வளவு சம்பந்தம் இல்லாமல் இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு மதிப்பு. இதே கதைக்கு நான் தலைப்புக் கொடுத்தால் 'ஒரு மங்கை கத்தரிக்காய் வாங்குகிறுள்' என்றுதான் போடுவேன்.''

''கத்திரிக்காய் வாங்கறது நடுத்தர வயதைத் தாண்டிய அம்மாள்! அவள் கத்திரிக்காய் வாங்கின சம்பவம் கதையில் ஒரு சிறு பகுதி! கதை ஓட்டம் முழுதும் அவள் கத்திரிக்காய் வாங்கிக் கொண்டு தெருவில் நிற்கவில்லே!''

''அப்பா! காலம் மாறிப் போச்சு! நீங்களும் உங்க கதாபாத்திரத்தை மாற்றணும்! வயதைக் குறைக்கணும்! நான் சொல்றதைக் குறுக்கிடாமல் கேளுங்கள்! நான் இந்தக் கதை அமைப்பை இப்படித்தான் விரும்புவேன்.. லதா இருபது வயது மங்கை. பேரழகி! மெல்லிய வாயில் ஸாரி! மாட்சிங் பிளவுஸ்! இந்த வர்ணனையிலே வாசகர்கள் மெய்மறந்து பின்னுலே கதையைக் கொஞ்சம் தாஞகவே மறக்க வேண்டும்! கறிகாய் வண்டிக்கார பாஸ்கர் கட்டிளம் காளே. சினிமா நட்சத்திர முக வெட்டு! பெரிய பணக்காரன்! பொழுது போக்குக்காகக் கறிகாய் விற்கிறன். இது கதாநாயகிக்குத் தெரியாது. அவள் ஒரு பணக்கார வீட்டுப் பெண். ஏழை மணுளனேத் தேர்ந்தெடுத்து நாட்டின் சோஷலிஸ கோஷத்துக்கு வலுக் கொடுக்கத் துடிக்கும் நாகரிக யுவதி.''

''நாசமாய்ப் போச்சு!... நடுத் தெருவிலேயே கல்யாணத்தைப் பண்ணி விடுவாய் போலிருக்கு!''

''கல்யாணம் என்ற வார்த்தை வந்தாலே இன்றையச் சிறுகதையின் அமைப்பு கோவிந்தா. அது வராது! அதற்கு முந்திய 'சாப்டர்'கள்தான் முக்கியம்.''

''அவர்கள் இரண்டு பேரும் தெருவிலே கொஞ்சிக் கொண்டே கடைசிவரையில் நிற்க வேண்டுமா?''

''தத்துவம் பேசணும்! வெறும் பேச்சில்லே! 'வானத்துக்கு நிலா வேண்டும் என்ற அவசிய



# அன்றும் இன்றும்

மெஞ

யில்லே; ஆனால் நிலாவுக்கு வானம் வேண்டும்' என்பது போல் அவர்கள் பேசிக் கொள்ள வேண்டும். இங்கிலீஷ் வார்த்தைகளை அள்ளித் தெளிக்க வேண்டும்.''

''கடையில் அவள் நாகரிகமாகக் கத்திரிக் காய்க்குப் பதில் காலி பிளவரைத் திருடு கிறாளா?''

''கத்த அற்பக் கற்பனை! அவள்தான் அவ னுடைய மனத்தையே திருடிவிடுகிறாளே!''

''ஓஹோ!... அப்புறம்!''

''அவன் பணக்காரன்னு தெரிஞ்சதும் ஒரு பெரிய ஷாக் அவளுக்கு!''

''நம்ப மத்திய சர்க்காருக்கு சுப்ரீம்கோர்ட் தீர்ப்பைக் கேட்டபோது இருந்த மாதிரி...''

''அதை இன்னொரு ஷாக் வந்து போக்கு கிறது.''

''எலக்ட்ரிக் பிளக்கிலே கையைவைக்கிறாளா?''

''கொலைகாரக் கற்பனை... அவனுடைய அப்பா ஒரே நாள் குதிரைப் பந்தயத்திலே ஜாக்பாட்டை நம்பி லட்ச ரூபாயைக் கோட்டை விட்டுக் குதிரைப் பந்தய மைதா னத்திலேயே வீட்டைக் கிரயம் பண்ணி விடுகிறார்.''

''பேஷ் பேஷ்! இவள் லெவல் கதையிலே இறங்கிப் போச்சு!''

''அப்புறம்! இவன் கறிகாய்க் கடை போட்டுக் கொத்தவால் சாவடியில் கத்திரிக் காய் வாங்கி விற்கிறான்.''

''என்னடா கோவிச்சுக்கறே!...கதையைச் சொல்லு...!''

''கோவிச்சுக்கலே அப்பா! அதுதான் கதை. அவனுக்குப் பணமில்லேன்னவுடனே அவன் தலைமறைவாயிடறான்! இவள் பிழைப்புக்குக் கறிகாய்க் கடை வைக்கிறாள். இதை எழுத்தில் சொல்ல மாட்டார்கள். கற்பனைக்கு விட்டு விடுவார்கள்! முடிவுன்னு இருக்கக் கூடாதே!''

''பிரமாதம்! என் கதைக்கும் உன் கதைக் கும் பொதுவான ஒரே விஷயம் கத்திரிக்காய் தான்!... மற்றது எல்லாம் அடிபட்டுப் போச்சு!''

''அதுதான் தலைப்பை 'ஒரு மங்கை கத்தரிக் காய் வாங்குகிறாள்' என்று கொடுத்தேன்!... நீங்களும் உங்க கதையை இந்த ஸ்டைலில் மாற்றிக் காலத்துக்கு ஏற்ப எழுதுங்கள்.''

''அந்தக் கதையை இப்படிக் கொண்டா!''

''ஐயையோ! என்னப்பா இப்படிக் கிழிச் சுட்டீங்க?''

''ஆமாண்டா! காலத்துக்காக எழுத் தாளன் மாற வேண்டாம்! காலம் மாறுகிற போது எழுத்தாளன் தன் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமே எழுதலாம்! அதுவரை அவன் காத்திருக்கலாம். காலம் எப்போதுமே துச்சாசன கீசக யுகமாகவே இருந்துவிடாது.''

பஞ்சாமிர்தம் ஜன்னல் வழியாகத் தெரு வைப் பார்த்துக் கொண்டு நின்றார். தெருவில் ஒரு யுவதி முக்கால் முதுகு தெரியும்படி பிளவுஸ் அணிந்து தோளில் கைக்குட்டை போல் முந்தானையைப் போட்டு நடந்து போய்க் கொண்டிருந்தாள். உடனே திரும்பித் தம் மகனைப் பார்த்தார்!

''ஹும்! உணர்ச்சிகள்தான் இலக்கிய ரூபம் பெறும்னு நம்பினேன். இப்போது கிளர்ச்சிகளுக்குத்தான் காலம் போயிருக்கு'' என்ற அவருடைய எண்ணம் ஒலி உருவம் பெறாமலேயே அவர் உதடுகளுக்குள் சிறைப் பட்டு நின்றது.



# அளப்புச் சிரிப்புக்கள்

கே. வி. முரளி

❊கோடையை அளந்ததால் பிறந்தவை!

○ ஒரு தகப்பனார் கடைக்காரரிடம்: ''அகல மாக விரியும் நான்கு கோடைக்காகவும், காம்பு நீளமாக உள்ள விசிறி நான்கு பையன்களின் 'ரிலீஃப்'க்காகவும் கொடு!''

○ மஹாபலிபுரத்தில் மர நிழலில் ஒருவர் நண்பரிடம் அலுத்துக் கொண்டார்: ''நார், முடி, தேங்காய், இளநீர் இத்தனையையும் படைத்த ஆண்டவன் அதனுள் ஒரு 'ஐஸ்' துண்டையும் போட மறந்துவிட்டானே!''

○ ஒருவர்: இப்படியே உஷ்ணம் ஏறிக் கொண்டு போனால் என்ன செய்வது சார்?

மற்றவர் (எரிச்சலுடன்): காரை விற்று விட்டு 'ஃபயர் எஞ்சின்' வாங்கி வைத்துக் கொள்ளுங்கள்!

○ மந்திரி: எனக்கு வெய்யிலே தெரிய வில்லே.

மற்றவர் (ரகசியமாக): எப்படித் தெரி யும்? எல்லாரும் உங்களுக்கு ஐஸ் வைக் கிறார்களே!

○ ''இப்படியே உஷ்ணத்தில் தெருவெல் லாம் தார் உருகி ஓடிக் கொண்டிருந்தால் அரசாங்கம் பஸ்களை எடுத்துவிட்டுக் கப்பல் களை ஓட்டவேண்டி வரும்!''














உங்களைச் சுற்றிலும்
சந்தனத்தின்
நறுமணம் கமழட்டும்

HLT 5671A

**மலாய் சந்தன சோப்பும்
டால்கம் பவுடரும்
நாள் எல்லாம்
உங்களை எழிலுடனும்
நறுமணத்துடனும்
திகழச் செய்ய
மிகப் பொருத்தமான
ஒரு ஜோடி**

இந்த சந்தன சோப்பு - குளிர்ச்சியானது மிருதுவானது, சுகமானது. உங்களது சருமத்துக்கு எழிலூட்டுவது. இந்த சந்தனப் பவுடர் - மிருதுவானது. புத்துணர்ச்சியூட்டுவது. இந்த சோப்பையும் பவுடரையும் உபயோகித்தால் வியர்வை கொட்டும் ஒரு வெப்பமான நாளிலுங்கூட நீங்கள் சந்தனத்தின் நன்னிகரில்லாத நறுமணம்கமழ எழிலுடனும் தூய்மை உணர்ச்சியுடனும் இருப்பீர்கள்

கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெடின் தயாரிப்புகள்.

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

